மணம் கமழும் முறையில்
உங்கள் சருமத்தை இன்று நீங்கள்
ஆரோக்கியத்துடன் வைத்திருக்கலாம்.
அத்தகைய சிறப்பு உள்ளது

# ப்ரீஸ்




ஆக்டமர்
கலந்த டாய்லெட் சோப்

சருமக் கிருமிகளை ஒழிக்கிறது

உடல் நாற்றங்களை நிறுத்துகிறது

சருமத்தை ஆரோக்கியத்துடன் வைத்திருக்கிறது

புதுமையுடன் வைத்திருக்கிறது!




8 அணாதான்
உள்ளூர் வரிகள் நீங்கலாக

இராஸ்மிக் தயாரிப்பான "ஜனாப் ரூபயே" நிகழ்ச்சியைக் கேளுங்கள். ரேடியோ சிலோன் ஹிந்தி லைனில், சனிக்கிழமைதோறும் இரவு 8-30 மணிக்கு.

இராஸ்மிக் கம்பெனி லிமிடெட், லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது. BZ. 3-50 TM

# கல்கி

பொருளடக்கம்

மே 20 1956




"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 15 | இதழ் 42

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

துன்முகி ௵ | வைகாசி 7

# பாரதத்தின் உயர்வே! வருக!

பாக்கியம் செய்த தேசங்களிலேதான் எல்லா லட்சணங்களும் பொருந்திய மகான் ஒருவர் ஜனனம் ஆகிறார். அவர் முகத்தின் காந்தி மக்களை வசீகரம் செய்கிறது. அவருடைய உள்ளத்தின் ஒளி அவருடைய வாக்கிலே சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது. அவருடைய வீரமும் தீரமும் ஒழுக்கமும் நடத்தையும் சுயநலமற்ற தியாகமும் பொதுநலச் சேவையும் மக்களின் இதயச் சிம்மாசனத்தில் அவரை ஏற்றி வைத்து வணங்கும்படி செய்கின்றன.

அப்பேர்ப்பட்ட மகானைத் தரிசனம் செய்வதற்கு மக்கள் ஓடோடியும் வருகிறார்கள். மணிக்கணக்கிலும் நாள்கணக்கிலும் அவருக்காகக் காத்திருக்கிறார்கள். அவருடைய திருமுகத்தை ஒருகணம் பார்த்தவுடனே பரவசம் அடைகிறார்கள். அவருடைய குரலைக் கேட்டதும் மெய்ம்மறந்து புளகாங்கிதம் அடைகிறார்கள். அத்தகைய இலட்சிய புருஷரின் வாக்கைக் கேட்டதும், "இதுதான் தெய்வத்தின் வாக்கு" என்று எண்ணி மனம் மகிழ்கிறார்கள்.

இவ்வாறெல்லாம் புகழக்கூடிய உலகத்து இலட்சிய மகா புருஷர்களின் வரிசையில் உதித்தவர் நம்முடைய நாட்டில் ஒருவர் இருக்கிறார் என்பதும் அவர்தான் ஸ்ரீ விநாயக வினோபா பாவே என்பதும், அறுபத்து இரண்டு பிராயமுள்ள இளைஞர் என்பதும், தூயஉள்ளமும் எளிய வாழ்க்கையும் கொண்ட மகரிஷி என்பதும், சென்ற வாரம் வினோபாஜி தெய்வத் தமிழ் நாட்டின் எல்லையில் காலடி எடுத்து வைத்த சமயம் ஐயமற நிரூபணமாயிற்று.

சென்ற 13-ந் தேதி காலை ஆறரை மணிக்குச் சென்னையிலிருந்து முப்பத்துநாலு மைல் தூரத்தில் திருவள்ளூர் தாலூக்காவைச் சேர்ந்த பட்டரைப் பெரும்புதூர் கிராமத்துக்குள் வினோபாஜி பிரவேசித்தார். ஆந்திர நாட்டுக்கும் தமிழ் நாட்டுக்கும் எல்லையாக இருக்கும் கொற்றலை ஆற்றின் கரையில் உள்ள இலுப்பத் தோப்பில் வினோபாஜியைச் சென்னை ராஜ்யத்தின் முதன் மந்திரி காமராஜர் ஆயிரக்கணக்கான தமிழ் மக்கள் புடைசூழ நின்று வரவேற்றார். மங்கள வாத்தியம் முழங்க, நாகஸ்வர கீதம் ஒலிக்க, ஒன்பது பெண்மணிகள் பூர்ண கும்ப மரியாதையுடன் வரவேற்க வினோபாஜி கூப்பிய கரங்களுடன் தமிழ் நாட்டின் மண்ணில் தம் புனித பாதத்தை வைத்தார்.

தமிழ்நாட்டில் பூதான யாத்திரையைத் தொடங்கி இருக்கும் பாரத நாட்டின் தவமுனிவரைத் தமிழ் மக்களின் சார்பில் நாமும் வணங்கி வரவேற்கிறோம். முதல் சத்தியாக்கிரஹியாகி மும்முறை கடுஞ் சிறையில் தவம் புரிந்த தேசபக்த முனிவரைப் பரிந்து வரவேற்கிறோம். மண்ணாசை பூதத்தை வெற்றி கொண்ட மகாத்மாவை மனம் உவந்து வரவேற்கிறோம். உலக சரித்திரத்திலேயே பூமிதானம் என்னும் புனித இயக்கத்தை ஆரம்பித்துப் புது வழிகாட்டிய புண்ணிய புருஷரைப் "பாரதத்தின் உயர்வே! வருக!" என்று தமிழ் மக்களுடன் கோஷித்து வரவேற்கிறோம்.

** ** ** **

பாரமார்த்திக உலகில் ஆச்சார்ய வினோபா பாவே காந்தி மகானின் ஞானப் புதல்வராக இருந்து அவர் விட்டுச் சென்ற நிர்மாண வேலைகளைச் செய்து வருகிறார். மகாத்மாஜி முன்னொரு நாள், "இந்தியா சுதந்திரம் பெறும் வரையில் சபர்மதி ஆசிரமத்துக்குத் திரும்பி வருவதில்லை" என்று சபதம் செய்து விட்டுக் கிளம்பியதைப் போலவே வினோபாஜியும் "பூமிதான யக்ஞம் பூர்த்தியாகும் வரையில் பௌனார் ஆசிரமத்துக்குத் திரும்புவதில்லை" என்ற சபதத்துடன் யாத்திரை புறப்பட்டிருக்கிறார்.

நாம் செல்லுமிடங்களிலெல்லாம் நிலம் படைத்தவர்களிடம் பூமிதானம் பெற்று வருகிறார். மொத்தம் பதினாறாயிரம் மைல்களுக்கு மேலாகப் பாத யாத்திரை செய்திருக்கிறார். ஐம்பத்து மூன்று லட்சம் ஏக்கரா நிலத்தையும், ஆயிரத்து முப்பத்தெட்டு கிராமங்களையும் ஏழைகளுக்குப் பிரித்து வழங்குவதற்காக நிலம் படைத்தவர்கள் இதுவரை விநோபாஜியிடம் தானமாகக் கொடுத்திருக்கிறார்கள்.

ஸ்ரீ விநோபா பாவே தொடங்கிய பூமிதான இயக்கம் எதிர்பாராத அளவில் வெற்றிபெற்று வருவதைக் கண்டு உலகமே வியக்கிறது. அயல் நாட்டினர் விநோபாஜியின் பூமிதான இயக்கத்தின் அருமை பெருமைகளை அறிந்து கொள்வதில் அளவற்ற ஆர்வம் காட்டத் தொடங்கியிருக்கின்றனர். நமது சர்க்காரும் இதில் சிரத்தை காட்டி வருகிறது.

ஸ்ரீ விநோபாஜி தமது தமிழக யாத்திரையின்போது 17, 18, 19 ஆகிய மூன்று தினங்களில் சென்னை நகரில் சுற்றுப்பிரயாணம் செய்கிறார். 26-ம் தேதி காஞ்சிபுரத்தில் நடக்கப் போகும் சர்வோதய மகாநாட்டில் கலந்து கொள்ளுகிறார். இந்த மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக ஜனாதிபதி ராஜன் பாபுவும் விஜயம் செய்கிறார். இதற்குப் பிறகு விநோபாஜி தமிழ் நாட்டில் தொடர்ந்து பல மாதங்கள் கால்நடையாக யாத்திரை செய்து நிலம் படைத்த மக்களிடம் நிலதானம் கேட்கப் போகிறார். ஆச்சாரிய விநோபாஜியின் யாத்திரையைத் தமிழ் மக்கள் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஒரு சிலர் ஆயிரக்கணக்கான ஏக்கரா நிலத்துக்குச் சொந்தக்காரர்களாக இருப்பதும், நிலத்தில் பாடுபட்டு உழைக்கக் கூடிய பலர் நிலம் இல்லாமல் திண்டாடும் நிலைமையிருப்பதும் உடனடியாக மாற வேண்டும்.

இதைச் செய்வதற்குத்தான் ஸ்ரீ விநோபாஜி பூமிதான யாத்திரை செய்து வருகிறார். இதன் மூலம் நிலதானம் கொடுப்பவர்களும் ஆசீர்வதிக்கப்படுகிறார்கள். பெற்றுக் கொள்பவர்களும் பலன் அடைகிறார்கள்.

“நான் மிகுந்த நம்பிக்கையுடன் தமிழ் நாட்டில் கால் வைக்கிறேன். இந்த ராஜ்யத்தில் தமிழ் மக்கள் பூமிதான இயக்கத்துக்கு மகத்தான வெற்றி ஏற்படச் செய்வார்கள் என்று நம்புகிறேன். தமிழ் மக்கள் மற்ற ராஜ்யங்களுக்குச் சிறந்த உதாரணமாக விளங்க வேண்டும் என்பதே என்னுடைய அவா” என்று தமது தமிழக யாத்திரைத் தொடக்கத்தில் ஆச்சாரிய விநோபா பாவே கூறினார்.

மகாத்மாவின் மனத்துக்குகந்த தொண்டுகளில் எப்போதும் தமிழ் நாடு முன்னணியில் நின்று வந்திருக்கிறது. இன்று காந்திக்குப் பின் காந்தியாக விளங்கி வரும் விநோபா பாவேயின் புனிதமான பூமிதான யாத்திரைக்குத் தமிழ்ப் பெரு மக்கள் பரிபூரண ஆதரவு அளித்து அவருடைய நம்பிக்கையை வெற்றி பெறச் செய்ய வேண்டும் என்று கோருகிறோம்.

# நவயுக நகரிலே புதுமை!

இந்த வருஷத்தில் நிகழ்ந்துள்ள இலங்கை ஜனநாயக காங்கிரஸ் நடவடிக்கைகளில் புது மணம் கமழ்வதை நேயர்கள் கவனித்திருக்கலாம். இதற்குமுன் இலங்கையில் நடக்கும் காங்கிரஸ் மகாநாடுகளில் இலங்கை சர்க்காரை ஒரு அத்தியாயம் கண்டிப்பார்கள். சர்க்கார் தங்களுடைய போக்கை மாற்றிக் கொள்ளாவிடில் இலங்கை இந்தியர்களின் மகத்தான எதிர்ப்பைச் சமாளிக்கும்படி நேரும் என்று எச்சரிப்பார்கள். அத்துடன் மகாநாடு இனிது நிறைவேறிவிடும்! ஆனால், இலங்கை சர்க்கார் பழைய கரடுமுரடான பாதையிலேயே போய்க் கொண்டிருப்பார்கள்.

சென்ற பல ஆண்டுகளாக அதிகாரத்திலிருந்த ஐக்கிய தேசியக் கட்சி சென்ற தேர்தலில் படுதோல்வி யடைந்தது அல்லவா! இலங்கை இந்தியர்களுக்கு நீதி வழங்க வேண்டிய பல சந்தர்ப்பங்களையும் நழுவ விட்டு, மனித தர்மத்துக்கு விரோதமாக மமதையுடன் நடந்து கொண்ட ஐக்கிய தேசியக் கட்சி தோல்வியுற்றதைக் குறித்து நாவலப்பிட்டி நவயுக நகரில் நடைபெற்ற காங்கிரஸ் மகாநாட்டில் தலைவர் ஸ்ரீ கே. ராஜலிங்கமும் இதர பிரமுகர்களும் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீ பண்டாரநாயகா தலைமையில் ஏற்பட்டுள்ள புதிய மந்திரி சபையை மனப்பூர்வமாக வரவேற்று, புதிய சர்க்காருடன் தாங்கள் பூரணமாக ஒத்துழைக்கத் தயாராயிருப்பதாய் அறிவித்திருக்கிறார்கள்.

“யதேச்சாதிகாரம் காரணமாக நிராகரிக்கப்பட்ட லட்சக்கணக்கான இந்தியர்களின் பிரஜா உரிமை மனுக்களை மீண்டும் புனராலோசனை செய்ய வேண்டும். இலங்கையை உண்மையில் தாயகமாகக் கொண்ட சகல இந்தியர்களுக்கும் பிரஜா உரிமை அளிக்க வேண்டும்” என்று ஸ்ரீ ராஜலிங்கம் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

இலங்கையிலிருந்து இந்தியர்களை வெளியேற்றுவதால் இலங்கையின் பொருளாதார நிலைமை சீர்ப்பட்டு விடாது என்பதை அவர் எவரும் மறுப்பதற்கு இடமின்றிச் சுட்டிக் காட்டியிருப்பதுடன், இலங்கை சுபிட்சம் அடைவதற்கான முறைகளையும் குறிப்பிட்டிருக்கிறார். ஏற்கனவே காடுகளையும் மேடுகளையும் அழித்து இலங்கையைப் பொன் கொழிக்கும் பூமியாகச் செய்த இலங்கை இந்தியர்கள், இலங்கையின் செல்வம் பன்மடங்கு பெருகுவதற்கு உதவியாகத் தங்களுடைய உழைப்பை நல்க மீண்டும் தயாராக இருப்பதாகவும் உறுதி கூறியுள்ளார்.

இப்போது இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர்கள் புதிய சர்க்காரிடம் தங்களுடைய நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் தெரிவித்திருக்கிறார்கள். இலங்கையின் சுபிட்சத்துக்காகச் சர்க்காருடன் பூரணமாக ஒத்துழைக்கத் தயாராக இருப்பதாயும் ஐயந்திரிபுக்கு இடமின்றித் தெளிவாக்கியிருக்கிறார்கள். அருமையான இந்தச் சூழ்நிலையைப் பண்டாரநாயகா சர்க்கார் நன்கு உபயோகப்படுத்திக் கொண்டு, பல வருஷங்களாக இலங்கையின் நற்பெயருக்குக் களங்கத்தைக் கொடுத்து வரும் இந்தியர் பிரச்னையைத் தீர்க்கக் காலம் கடத்தாமல் முன் வருவார்கள் என்று நம்புகிறோம்.



தமிழகத்தில் விநோபாஜி

# என்ன சேதி?

## "தவளை மனிதன்"

ருஷ்யத் தலைவர்கள் பிரிட்டனுக்கு வந்து விட்டுப் போனாலும் போனார்கள். அந்த நாடே அல்லோகல்லோலப் பட்டுக் கொண்டிருக்கிறது. தொழிற் கட்சியினர் ருஷ்யப் பிரமுகர்களுக்கு அளித்த விருந்தொன்றில் ருஷ்யாவிலும் அதற்குட்பட்ட நாடுகளிலும் அடைபட்டுக் கிடக்கும் பிரிட்டிஷ் சோஷலிஸ்ட் கைதிகளை விடுவிக்க வேண்டும் எனக் கோரினர். இதன் விளைவாக குருஷேவுக்கும் சில தொழிற் கட்சியினருக்கும் வாக்குவாதம் சூடாக நடந்தது. விருந்துக்கு வந்த இடத்தில் விருந்தாளிகளை இங்கிதம் தெரியாமல் நடத்தலாமா என்று பிரிட்டிஷ் ஆளும் கட்சிப் பத்திரிகைகள் தொழிற் கட்சியினரைக் கேலி செய்தன.

இப்பொழுது பிரிட்டிஷ் ஆட்சியினரைத் தொழிற் கட்சியினர் மடக்கும் ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. நீர்மூழ்கி நிபுணரான (தவளை மனிதன்) ஒரு பிரிட்டிஷ் மாஜி கடற்படை அதிகாரி; அவர் ருஷ்யத் தலைவர்கள் பிரயாணம் செய்த கப்பல்களுக்கு அடியில் சென்று வேவு பார்த்ததாகவும், இப்போது அந்த நீர்மூழ்கி நிபுணரின் இருப்பிடம் தெரியவில்லை என்றும் ஒருவேளை நீரில் மூழ்கியிருக்கலாம் என்றும் கூறப்படுகிறது.

தங்கள் நாட்டுக்கு வந்த விருந்தினரை வேவு பார்ப்பது முறையா என்று தொழிற் கட்சியினர் மடக்கப் பார்க்கின்றனர். பிரிட்டிஷ் பிரதம மந்திரி "அப்படி நீரில் மூழ்கிச் சென்ற 'தவளை மனிதர்' அனுமதியின்றிச் சென்றார்" எனக் கூறி ருஷ்யர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

இச் சம்பவத்தை இரு கட்சியினரும் எதிர்க் கட்சியை மடக்குவதற்குப் பயன்படுத்துவது ஆச்சரியமாயிருக்கிறதல்லவா?

## வள்ளுவர் திருநாள்

தெய்வப் புலவர் திருவள்ளுவர் திருநாள் வைகாசி அனுஷத்தில் தமிழ் கூறும் நல்லுலகெங்கும் ஆண்டுதோறும் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்த ஆண்டு அந்த அனுஷத் திருநாள் இம்மாதம் 24-ம் தேதி வருகிறது. தமிழ்ப் பெரு மக்கள் தங்கள் இல்லங்களிலும், பொதுச் சபைகளிலும் சங்கங்களிலும் இத்திருநாளை விசேஷமாகக் கொண்டாடி வள்ளுவரின் வாய்மொழிகளை நினைவு கூர்ந்து மகிழ்வார்கள். வள்ளுவரின் பொன்மொழிகள் தமிழர்களை மட்டுமல்ல, உலகப் பெரு மக்கள் அனைவரையுமே கவர்ந்துள்ளன. நிதிமந்திரி தேசமுக் பல சமயங்களில் குறள் பாக்களை மக்கள் சபையில் எடுத்துக் கையாண்டதைப் பார்த்திருக்கிறோம். ஏன்? காந்தி மகான் தமிழ் படித்தார் என்பது பலருக்குத் தெரியும். காந்திஜியைத் தமிழில் ஆர்வம் கொள்ளத் தூண்டியது எது தெரியுமா? தெய்வப் புலவரின் திருக்குறளை மூலத்திலேயே படித்து அனுபவிக்க வேண்டும் என்ற ஆசைதான்!

காந்திக்குப் பின் காந்தியாக விளங்கிப் பாரத மக்களின் உள்ளத்தைக் கவர்ந்திருக்கும் வினோபாஜி திருக்குறளைப் படித்து மகிழ்பவர். திருக்குறளைப் படித்த பிறகு தமிழ் நாட்டின் உயர்வையும், தமிழ்மொழியின் சிறப்பையும் உணர்ந்து பாராட்டியிருக்கிறார். அவர் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்யும்போதே திருவள்ளுவர் திருநாளைக் கொண்டாடும் பாக்கியம் தமிழ் மக்களுக்குக் கிடைத்திருக்கிறது.

உலக மொழிகள் பலவற்றில் மொழி பெயர்க்கப்பட்ட தமிழ் நூல் ஒன்று உண்டென்றால் அது திருக்குறள்தான்.

இப்படி உலகத்து மகான்கள் எல்லாம் போற்றி வணங்கிய நூல் திருக்குறள்.

இந் நூலை இயற்றி வான்புகழ் கொண்ட அந்த மகானின் புனிதத் திருநாளில்

அட்டைப்பட விளக்கம்

## மாமல்லபுரத்திலே சித்தர்!

மேனாட்டுத் தொடர்பு காரணமாக இன்று நாம் விஞ்ஞானத் துறையில் பல நூதன விஷயங்களைக் கற்றுத் தெரிந்திருக்கிறோம். ஆனால் நமது தமிழ் நாட்டில் எத்தனையோ பல நூற்றாண்டுகளாக ரஸாயனம், பௌதிகம், வான சாஸ்திரம், கணிதம், வைத்தியம் முதலிய பல துறைகளிலும் பற்பல அபூர்வமான நுட்பங்களைக் கண்டுபிடித்து அருமையான பாடல்களிலே நமக்கு வழங்கி வைத்திருக்கிறார்கள் சித்தர்கள். பகுத்தறிவு என்றும், உள்ளுணர்வு என்றும் சொல்லப்படுகிற இரண்டு வகையான மன வேகங்களையும் நன்கு ஆராய்ந்து, எண்ணற்ற விந்தைகளைக் கண்ட தமிழ் நாட்டுச் சித்தர்களில் ஒருவர், 'கடல் கண்ட கனவு' என்னும் கதையில் தோன்றுகிறார். அவரே இந்த வாரத்து அட்டையிலும், நமது ஓவியர் 'மணியம்' அவர்களின் கைவண்ணத்திலே காட்சி தருகிறார்.

## பூ(தான) மாலை




வினோபாஜி தமக்கு யாரும் மாலை போடுவதை விரும்பவில்லை.

அவரை நினைவு கூர்ந்து நமது அஞ்சலியைச் செலுத்துவோமாக!

## தட்சிணப் பிரதேசம்

'கேரள நாட்டினர் எங்கே தமிழ் நாட்டோடு இணைய விரும்பினர்? எப்பொழுது அம்மாதிரி கூறினர்?' என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்குத் தக்க பதில் சொல்வதுபோல் பாலூரில் கூடிய கோட்டய ஜில்லா காங்கிரஸ் மகாநாட்டில் தட்சிணப் பிரதேசக் கொள்கையை ஆதரித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது!

இரு தேசங்களும் இணைந்தால் இருபாலாருக்கும் எவ்வளவு நன்மையுண்டு என்பதைக் கணக்குப் போட்டு லாப நஷ்டம் பார்த்தால் தட்சிணப் பிரதேசம் ஏற்படுத்துவதிலுள்ள உயரிய நோக்கமே கெட்டு விடும். இரு மொழி, மும்மொழி பிரதேசங்களை இணைத்துப் பாரத நாட்டின் தென் பகுதியில் ஒரு பெரிய ராஜ்யமாக நிலைநாட்டினால் தென் தேசத்தவர் எதிர்காலத்தில் சுபிட்சப் பாதையில் முன்னேற வசதியாக இருக்கும் என்று மேலிடத்தில் கருதுகிறார்கள். அவர்கள் வட நாட்டில் இன்று நிலவும் சக்திகளையும், அவை பரிபூரணமாக வளர விடப்பட்டால் தென் தேசங்களால் ஈடு கொடுக்க முடியுமா என்பதையும் யோசித்தே தென்னாட்டினரை ஒன்றுபடச் சொல்லுகிறார்கள்!

அவர்கள் சொல்லில் உள்ள பொருள் தமிழ் மக்களுக்கும் கேரள மக்களுக்கும் கொஞ்சம் கொஞ்சமாகப் புரிந்து வருகிறது என்பதையே சமீப காலத்திய தமிழ் நாட்டு நிகழ்ச்சிகளும், கோட்டய ஜில்லா காங்கிரஸ் மகாநாடும் நமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன!

## காரிருளில் ஒரு மின்னல்

பெருவாரியான மக்கள் விருப்பப்படியே பாரத நாடு ஆளப்படுகிறது. இது ஜனநாயக யுகம். இந்த ஜனநாயக யுகத்தில் ஹிந்தி பேசுபவர்கள் பெருவாரியாக இருக்கும்போது, மொழி அடிப்படையில் சிறு சிறு ராஜ்யங்களாகப் பிரிந்து நிற்பவர்களின் குரல் எங்கே எடுபடப் போகிறது! இருப்பினும் காரிருளில் ஒரு மின்னலைப்

போல் ஹிந்தி மொழியினரிடையே ஒரு சிலர் நடு நிலையில் நின்று பேசுவது தமிழ் பேசும் சிறுபான்மையோராகிய நமக்குப் பெரிதும் மகிழ்ச்சி யளிக்கிறது!

சமீபத்தில் அஜ்மீரில் மத்திய பாரத் ஹிந்தி சாகித்திய சம்மேளனம் நடைபெற்றது. இதற்குத் தலைமை வகித்த அஜ்மீர் முதன் மந்திரி ஸ்ரீ ஹரிபாபு உபாத்தியாயா ஹிந்தி மொழியினர்களுக்கு ஒரு எச்சரிக்கை விடுத்திருக்கிறார்.

“ஹிந்தி ஆதரவாளர்கள் தங்களுடைய அமோக உற்சாகத்தினால் நன்மையைவிட அதிகத் தீமையையே உண்டு பண்ணியிருக்கிறார்கள். தென்னாட்டு மக்களின் மனத்தில் சந்தேகங்களையும் துவேஷத்தையும் உண்டாக்கி யிருக்கிறார்கள். இதன்மூலம் தேசத்தின் ஐக்கியம் பாதிக்கப்பட்டிருக்கிறது.

“தென்னாட்டு ஞானிகள், இலக்கிய கர்த்தாக்கள், மற்றும் புகழ் பூத்தவர்களின் ஜயந்தி முதலான தினங்களைக் கொண்டாட வேண்டும். இந்தச் சூழ்நிலையை ஏற்படுத்தா விட்டால் நம் நாட்டிலேயே ஹிந்தி அந்நிய மொழியாகக் கருதப்படும்” என்பதே அந்த எச்சரிக்கை.

பாரத நாட்டின் பண்பு, கலை, நாகரிகம் எல்லாம் ஒன்று என்பதை உணர்ந்து கொள்ளாமல் பலர் பேசி வருகிறார்கள். இந்தச் சமயத்தில் மக்கள் எண்ணுவதையே சொல்லி, அவர்கள் வோட்டிலேயே கருத்தாக இராமல், உண்மை கசப்பாக இருந்தாலும் தைரியமாக எடுத்துச் சொல்லி ஹிந்தி பேசும் மக்களை நல்ல சமயத்தில் எச்சரிக்கை செய்துள்ள அஜ்மீர் முதன் மந்திரிக்கு ஒரு 'சபாஷ்' போடுகிறோம்!

# பனித்துளி

“குண்டூரில் 119 டிகிரி வெயில் அடிக்கிறது. தெருவில் யாருமே எட்டிப் பார்க்கவில்லை.” —செய்தி

**119 டிகிரி வெயில் அடிக்கிறது என்பதைத் தெருவில் எட்டிப் பார்த்தா தெரிந்து கொள்ள வேண்டும்?**

★

“வெகு நேரம் வரை பஸ் வராமலேயே இருக்கிறது. வந்தால் ஒரேயடியாகப் பல பஸ்கள் சேர்ந்தாற்போல் வருகின்றன. இதைத் தடுக்க பஸ் போக்குவரத்து இலாகா ஏற்பாடு செய்து வருகிறது.” —செய்தி

**ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒரு சமயம் பல பஸ்களாகவாவது சேர்ந்து வருகின்றன. புண்ணியவான்கள் அதையும் தடுத்து நிறுத்திவிடப் போகிறார்களோ?**

★

“நேரம் தவறாமல் குறித்த காலத்தில் வரும் ரயில்களுக்குப் பரிசு அளிக்கப்போவதாக ரயில்வே மந்திரி ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரி அறிவித்திருக்கிறார்.” —செய்தி

**நேற்று மூன்றரை மணிக்கு வரவேண்டிய ரயில் இன்று மூன்றரை மணிக்கு வரும்போது அந்த ரயில் குறித்த நேரத்தில் வந்து விட்டதாக எண்ணி ஏமாந்து விடக் கூடாது!**

★

“பண வீக்கத்தைக் குறைப்பதற்காக இரண்டாவது திட்ட காலத்தில் உத்தேச வரி விதிப்புத் தொகையான ரூபாய் 450 கோடியை ரூபாய் 850 கோடியாக உயர்த்தத் திட்டமிடப்பட்டிருக்கிறது.” —ஒரு செய்தி

**இவ்வளவு கோடி ரூபாய்களை வரியாக வசூலித்து விட்டால் அப்புறம் மக்கள் பணத்துக்கு வீங்கிப் போவார்களே!**

★

“இலங்கையில் பஸ் நிர்வாகத்தை இலங்கை சர்க்காரே ஏற்று நடத்தப் போகிறார்கள். அதற்காக இலங்கையிலிருந்து சிலர் சென்னை சர்க்கார் பஸ் நிர்வாகத்தைப் பார்வையிட வந்திருக்கிறார்கள்.” —செய்தி

**அட கஷ்ட காலமே! போயும் போயும் சென்னை சர்க்கார் பஸ் நிர்வாகத்தைத் தானா வந்து பார்க்க வேண்டும்?**

★

“மரங்களே இந்நாட்டின் செல்வம். மரங்களைக் கண்மூடித்தனமாக வெட்டக் கூடாது.” —ஒரு மந்திரி



**மரங்களை என்ன? எதையுமே கண்மூடித்தனமாக வெட்டக் கூடாது. அப்படி வெட்டினால் கைகாலில் அல்லவா காயம்படும்!**

★

‘காஷ்மீரைப் பாகிஸ்தான் பகுதியாகவும் ஹைதராபாத்தைச் சுதந்திர நாடாகவும் காட்டிப் பாகிஸ்தான் சர்க்கார் தேசப் படங்கள் வெளியிட்டுள்ளது.” —செய்தி

**பாவம், பாகிஸ்தான் தன்னுடைய ஆசையைத் தேசப் படத்திலாவது எழுதித் தீர்த்துக் கொள்கிறது போலும்!**

# கடல் கொண்ட கனவு

ஆறும் அத்தியாயம்

## சித்தர் வருகிறார்!

குமிழ்க் கட்டை என்று சொல்லப் படும் அந்த விசித்திரமான பாத ரட்சையின் ஒலிக்கு அத்தனை சக்தி யிருந்ததா என்ன! அந்த ஓசை கேட்டதோ இல்லையோ, விடுதி யின் நிர்வாக அறையிலே அமர்ந்து பேரேடுகளைப் பார்த்துக் கொண் டிருந்த விடுதித் தலைவன், அப்படியே அந்த ஏடுகளைச் சாய்வுப் பலகையில் போட்டு விட்டுப் பதறிக் கொண்டு எழுந்தான். கைப் பிரம்பு தரையிலே இரண்டு தட்டுத் தட்டி நிற்பதற்குள் அறைக்கு வெளியே கையும் காலும் நடுங்கியவண்ணம் ஓடி வந்தான்.

"என்ன பரம்பொருளே! இன் றிரவு குமிழ்க் கட்டைக்கு இந்த விடுதியிலே தாமசம்! அநுமதி உண்டா? இந்த ராஜ்யத்தில் யுத்தம் வரப் போகிறதாமே! இந்தப் பித் தனையும் ஒருவேளை ஒற்றன் என்று நினைத்து அறை கிடையாது, அறை தான் உண்டு என்று சொல்லி விடுமோ பரம்பொருள்!" என்று சொல்லியவண்ணம் தரையிலே மறு படியும் அந்தப் பிரம்பினால் ஒரு அறை அறைந்தார் சித்தர்.

விடுதித் தலைவன் முகத்தில் சிரிப்பை வரவழைக்க முயன்றான். ஆனால் அச் சந்தான் அவனுடைய முகம் முழுதும் விரிந்து பரந்தது. அந்த அச்சத்துக்கு மேலே சிரிப்பு என்ற முயற்சி பரி தாபமாக விரிந்து மங்கி மறைந்தது.

"என்ன பரம்பொருளே! சிரிக்க முயற்சிக்கிறது போலத் தோன்று கிறதே! அப்படித்தானா!" என்று சொல்லிக் கொண்டே குமிழ்க்



கட்டையின் 'டக்' 'டக்' என்ற ஓசையுடன் விடுதிக்குள் நடந்தார் சித்தர்.

அந்தக் குமிழ்க் கட்டையின் சக்தி அதற்குள் விடுதி முழுவதையும் ஒரு உலுப்பு உலுப்பி விட்டது. பணியாட்கள் அங்குமிங்கும் பதறி ஓடியதைப் பார்த்தால் ஏதோ சிங்கம், புலி அந்த விடுதிக்குள்ளே நுழைந்து விட்டதைப் போல இருந்தது. அயர்ந்து மறந்து யாராவது வானத்தைப் பார்த்துக் கொண்டே தாழ்வாரத்திலே நின்று கொண்டிருந்தால், அவருக்கு அருகிலே வந்து ஒரு பணியாள் 'சித்தர் வருகிறார்' என்று எச்சரிக்கை செய்து விட்டுப் போனான்.

'பளார் பளார்' என்று பிரம்பு தரையிலே ஓசை செய்தது. விஷயம் புரியாத இரண்டொரு தொலைதேசப் பிரயாணிகள் தங்கள் அறைக் கதவுகளைத் திறந்து கொண்டு வெளியே வந்து பார்த்தார்கள்.

"என்ன பரம்பொருளே! இந்தப் பித்தனைப் பார்க்க வருகிறீர்களா? வாருங்கள். நன்றாகப் பாருங்கள். இந்தப் பிரம்பினுடைய ஓசையைக் கேட்டுப் பயப்படாதீர்கள். இது பகல் வேஷக்காரர்களைக் கொஞ்சம் பயம் காட்டுவதற்காகச் செய்கிற ஓசை! அவ்வளவுதான்! விடுதியல்லவா! எத்தனையோ நோக்கங்களோடு இங்கே ஆடவரும் பெண்டிரும் வந்து தங்குகிறார்கள்! அவர்களுக்கு ஒரு கண்துடைப்பு இந்த ஓசை!"

இப்படிச் சொல்லிக் கொண்டே அந்தச் சித்தர் தாழ்வாரத்திலே நடந்து சென்றார்.

சாளரத்தோடு எம்பிப் பார்த்துக் கொண்டிருந்த சித்திராங்கன் சித்தருடைய கண்ணிலே பட்டு விட்டான்.

"என்னப்பா ராஜகுமாரா! என்ன பார்க்கிறாய்?" என்றார் சித்தர். 'ராஜகுமாரா' என்ற வார்த்தையைக் கேட்டதும் சித்தரோடு நடந்து சென்று கொண்டிருந்த பணியாளர்கள் 'கொல்' என்று சிரித்தார்கள். ஆனால் சித்திராங்கனுக்கு ஒரு கணம் உடம்பெல்லாம் வியர்த்து விட்டது!

"உன்னை ராஜகுமாரன் என்றால் இந்தப் பைத்தியங்கள் சிரிக்கின்றன! இதுதான் உலகம்! கவலைப் படாதே! அவர்கள் சிரிக்கட்டும். நீ அறைக்குள்ளே போ! உன்னுடைய காரியத்தை நீ கவனி தம்பி! இந்தப் பைத்தியம் ஏதாவது இப்படி உளறும். காதிலே போட்டுக் கொள்ளாதே!"

இப்படிச் சொல்லி விட்டு விறு விறு என்று நடந்தார் சித்தர். அவருக்கு என்று சித்தம் செய்யப்பட்ட ஓர் அறையை நோக்கிப் பணியாளர்கள் சித்தரை அழைத்துச் சென்றார்கள்.

மின்னல் மின்னி மறைகிற நேரத்திலே நடந்த விஷயம் இது! அந்த மின்னல் சித்திராங்க பூபதியினுடைய உள்ளத்தில் துவண்டு, அந்தமின்னலின் சக்தி உடம்பெல்லாம் பரவிச் சென்று அடங்கி அமர்வதற்கு வெகு நேரம் ஆயிற்று. அதற்குள் பணியாளன் மீண்டும் வந்து பொங்கு புனலிலே நீராடுவதற்கு அழைத்தான் பூபதியை.

"இதோ வந்துவிட்டேன்!" என்று இரண்டாவது முறையாக அந்தப் பணியாளனை அனுப்பி விட்டுச் சித்திராங்க பூபதி, அன்னை தந்தனுப்பிய தந்தப் பேடகத்தைக் கையிலே எடுத்தான். கை பதறியது. எல்லாம் சற்று நேரத்துக்கு முன்பு துவண்ட மின்னலின் அதிர்ச்சி வேகம் செய்கிற வேலை!

அறையின் மாபெரும் விளக்கு பூரண ஜோதியோடு எரிந்து கொண்டிருந்தது. அந்த வெளிச்சத்தில் பேடகத்தைத் திறந்தான் பூபதி. விளக்கின் ஒளியில் நன்றாகப் பார்த்தான்.

தந்தப் பெட்டியின் மூடியிலே வர்ணத்தினால் கீழ்க்கண்ட வாசகம் எழுதியிருந்தது :—

**இந்த மூன்றையும்
என்றும் மறந்திடு மகனே!**

மேற்கண்ட வாசகத்துக்குக் கீழே மூன்று சித்திரங்கள் மூன்று கோணங்களில் வரையப்பட்டிருந்தன.

சித்திராங்கன் அந்தச் சித்திரமடலை அகன்ற விழிகளினால் கூர்ந்து பார்த்தான். தன்னுடைய அன்னை அருமை மகனுக்குச் செய்யும் உபதேசம் அல்லவா அது! எந்த மூன்றையும் தன் ஆசை மகன் மறந்துவிட வேண்டும் என்று சொல்கிறாள்?

ஒரு சித்திரத்தில் இளம் பெண் ஒருத்தி வாலிபன் ஒருவனுடைய கையைத் தனது வளைக் கரத்தால் பற்றிய வண்ணம், மற்றொரு கரத்தை ஆகாயத்தை நோக்கி நீட்டுகிறாள். அவள் சுட்டிக் காட்டிய மேக வெளி

யில் பூரண சந்திரன் பவனி வந்து கொண்டிருக்கிறான்.

அடுத்த சித்திரத்தில் அழகான திராட்சைக் கொடி தெரிகிறது. புதருக்கு நடுவே ஒரு வளைக் கரம் நீண்டு வருகிறது. அதன் உள்ளங்கைப் பிடியிலே தாமரையின் வடிவத்தில் ஒரு மதுக் கிண்ணம்.

சித்திராங்க பூபதி மூன்றாவது சித்திரத்தைப் பார்த்தான். எல்லையற்ற ஆகாயத்துக்குக் கீழே எல்லையற்ற பாலைவனத்தின் மணல் பரப்பு. அதன் மேல் அணிவகுத்து நிற்கும் இரண்டு சேனை வியூகங்கள்—ஒன்றையொன்று எதிர்த்து நிற்கின்றன. கைதேர்ந்த ஓவியன் ஒருவன், ரதங்களையும் யானைகளையும் குதிரைகளையும் அந்த ஓவியத்தில் அணி அணியாகக்காட்டி,வாளேந்திய வீரர்கள் கோபாவேசத்தோடு போர் செய்வதைத் தத்ரூபமாகச் சித்திரித்திருக்கிறான்.

இந்தமூன்று ஓவியங்களுக்கும் கீழே வண்ண வரி வடிவத்தில் காமம், மயக்



கம், வெகுளி என்று எழுதப்பட்டிருந்தது!

சித்திராங்க பூபதிக்கு இப்பொழுது புரிந்தது. தன்னுடைய அன்னை தனக்கு நண்பனாகவும், ஆசாரியனாகவும், தெய்வமாகவும் நின்று வழிகாட்ட வேண்டும் என்று தந்த அந்தப் பேடகத்துக்குள்ளே, மூன்று உபதேசங்களைப் பொதிந்து கொடுத்திருக்கிறாள். கடல் கடந்த இந்தப் பெரிய நாட்டிலே தனது இலட்சியத்தை நாடிச் செல்லும் போது காமம், மயக்கம், வெகுளி மூன்றுக்கும் இடம் கொடுத்து விடக் கூடாது என்பது அன்னையின் கட்டளை. ஆனாலும் யுத்தத்திலே சேரக் கூடாது என்று எந்த வீரத் தமிழன்னையாவது தன் மகனுக்குச் சொல்லுவாளா? அப்படியானால் ஏன் இப்பொழுது தன் அன்னை தனக்கு அப்படி ஒரு எச்சரிக்கை செய்கிறாள்? இலட்சியத்தைக் கைவிட்டு விட்டு, வீண் சண்டைகளிலே ஈடுபடக் கூடாது என்கிறாள் போலும்!

பூபதி நினைத்தான்: 'உண்மை. இந்த மூன்று பகைவர்களும் என்னை வந்து நாசம் செய்து விடாதபடி காப்பாற்றிக் கொள்ளுவேன்! நிச்சயம்!'

இவ்வாறு மனத்திற்குள் தீர்மானம் செய்து கொண்டே, பேடகத்தைப் பூட்டி வைத்து விட்டு, அறையின் கதவுகளையும் தாளிட்டு விட்டுக் குளிப்பதற்காகப் பொங்குபுனலை நோக்கித் தாழ்வாரத்தோடு நடந்தான் சித்திராங்கன்!

"தம்பி!" என்று குரல் கேட்டது! அப்படியே பதறி விட்டான் சித்திராங்கன். அது அந்தக் குரல்!

"தம்பி! மெதுவாக நட. காலை உறுதியாக ஊன்றிக் கொண்டு நட! இடறி விழுந்து விடாதே!" என்றார் சித்தர், மாயப் புன்னகையோடு!

வியப்பிலிருந்து மீள்வதற்குள் அவர் எதிரே வந்து கொண்டிருந்தார்! அவரும் பொங்கு புனலிலே குளித்து விட்டு இவனுக்கு எதிரே நடந்தார்! காலில் இப்பொழுது குமிழ்க் கட்டை இல்லாததால் ஓசைப் படாமல் வந்து கொண்டிருந்தார்! சித்திராங்கன் தானாக நின்று விட்டான்.

"என்ன நின்று விட்டாய், மாணவனே! மேலே நட! இந்தப் பூமி கொஞ்சம் வழுக்காக இருக்கும்! கால் வழுக்கிவிடக் கூடாதே, வாலிபப் பிள்ளை ஆயிற்றே, என்று எச்சரிக்கை செய்தேன். நீயானால் மேலே நடக்காமல் நின்றுவிட்டாயே! போய்க் குளி, தம்பி! தலையை நன்றாகப் புனலிலே கொடு!"

இப்படிச் சொல்லிவிட்டு மேலே நடந்தார் சித்தர். சித்திராங்கனும் அங்கே நிற்க முடியாமல் மேலே நடந்தான்.

பொங்கு புனலில் குளிக்கும் போதே யோசனை பலமாக இருந்தது பூபதிக்கு! முதலில் "ராஜகுமாரா!" என்றார்! இப்பொழுதோ "மாணவனே!" என்கிறார்! பார்த்தால் விநோதமான தாடியும் சடையுமாக இருக்கிறார். காஷாயம் இல்லையென்றாலும் இவர் ஒரு சாமியார்தான். ஆனால் சாமியார் வேஷத்தில் வலைய வருகிற ஒரு ஒற்றராக இருக்குமோ? தன்னைப் பற்றிச் சகலமும் தெரிந்தவர் போல மத்தியிலே வார்த்தைகளைச் செருகுகிறாரே? வழுக்கி விழுந்து விடாதே என்கிறாரே! காமம், மயக்கம், வெகுளி இந்த மூன்றிலும் வழுக்கிவிடக் கூடாது என்று சொல்கிறாரா?

இந்த விடுதியில் உள்ளவர்கள் எல்லாரும் இவரைக் கண்டு ஏன் இத்தனை தூரம் பயப்படுகிறார்கள்? இந்தப் பயத்திலும் ஒரு விசித்திரம் அல்லவா இருக்கிறது! வெறும் அதிகாரத்துக்குப் பயப்படுகிற பயம் வேறு விதமாக இருக்குமே! அதில் அந்தரங்க சுத்தி யிராது! அந்தப் பயத்தில் அன்பு இராது! ஆனால் இந்தச் சித்தரிடம் இவர்கள் எல்லாரும் பயப்படுகிற முறை முற்றிலும் புதிதாக இருக்கிறது. ஆணையினால் ஏற்படுகிற பயமில்லை இது. அன்பினால் ஏற்படுகிற பயம். அதிகாரத்தைக் கண்டு உண்டாகிற அச்சம் இல்லை. ஏதோ ஆற்றலைக் கண்டு மடங்குகிற வணக்கம் இது. யோசித்துப் பார்த்தால் இவர்கள் எல்லாருக்கும் இந்தச் சித்தரிடம் உள்ள பயம் ஒரு பக்தியினால் உண்டாவது போலவே தெரிகிறது.

சித்திராங்கன் யோசித்தான்: 'நமது சம்பிரதாயத்தில் பயபக்தி என்று ஒரு வார்த்தை இருக்கிறதே. அது இது தானோ! பயமும் பக்தியும் சேர்ந்த நிலை ஒன்று இருக்கிறது என்பது இப்

பொழுதல்லவா தெரிகிறது! ஆமாம்! சந்தேகமில்லை. இதற்குப் பெயர்தான் பய பக்தி!''

இப்படியெல்லாம் சிந்தனை செய்து கொண்டே சித்திராங்கன் பொங்கு புனலிலே குளித்து விட்டு, நேரே அறைக்குப் போய் உடையை மாற்றிக் கொண்டு, உணவுச் சாலையை நோக்கி நடந்தான்.

சித்தரை அதன் பிறகு அங்கு காண வில்லை. உணவை முடித்துக் கொண்டு தன் அறைக்குத் திரும்பி வந்து தனியே உட்கார்ந்தவாறு, மரக் கலத்தில் புறப்பட்டதிலிருந்து தனக்கு ஏற்பட்ட அநுபவங்களை யெல்லாம் எண்ணிப் பார்த்துக் கொண்டே இருந்தான். சித்தர் வந்ததும், அவர் பேசிய விசித்திரமான வார்த்தைகளும், நினைக்க நினைக்க அவன் மனத்தை என்னவோ செய்தன. எல்லாவற்றிற்கும் மேலாக "வழுக்கி விழுந்து விடாதே!" என்று அவர் எச்சரிக்கை செய்ததுதான் அவனை அச்சுறுத்தியது. தன்னந் தனியாக இருந்து புலவரையா சொன்ன பிரகாரம் "வேயுறு தோளிபங்கன்" என்ற பதிகத்தை மெதுவாக உதட்டுக்குள்ளேயே ஒரு தரம் பாடினான். அப்பொழுது கதவை யாரோ தட்டினார்கள். "சித்தர்தான் வந்து விட்டாரோ!" என்று பதறிப்போய்க் கதவைத் திறந்தால், பணியாள் நின்று கொண்டிருந்தான்.

"அறைக்குள்ளே புழுக்கமாக இருந்தால், அறையைப் பூட்டி விட்டு மேல் மாடத்துக்குப் போய்த் திறந்த வெளியிலே படுத்துக் கொள்ளலாம். நிலாவும், கடல் காற்றும் அருமையாக இருக்கும்!" என்றான் அவன்.

"அடடா! இந்தத் தமிழ் நாட்டில் விருந்துபசரிப்பு என்பதைக் கூட ஒரு கலையாக அல்லவா வளர்த்திருக்கிறார்கள்! நம்முடைய வலம்புரித் தீவிலும் ஒரு காலத்தில் இப்படிப் பட்ட நாகரிகமும் ஆசாரமும் இருந்திருக்கும் அல்லவா! எல்லாம் இப்பொழுது அந்தப் பேரி யாழோடு மறைந்து விட்டன போலும்!''

இவ்வாறு எண்ணிக் கொண்டே சித்திராங்கன் அறைக் கதவுகளை நன்றாகப் பூட்டிச் சாத்தி விட்டு, மேல் மாடத்தை நோக்கிச் சென்றான். செல்லும் போதே, படிகளில் ஏறும் போதே, பேரியாழைப் பற்றிய சிந்தனை அவன் மனத்தில் புரண்டு கொண்டிருந்தது.

மாமல்லபுரம் விடுதி இத்தனை பெரிதாக இருக்கும் என்று ஓரளவு தான் யூகித்திருந்தான் சித்திராங்க பூபதி. இப்பொழுது மாடத்துக்கு வந்து பார்த்தால் அவன் அப்படியே கிறங்கிப் போய் விட்டான். அவன் எதிர்பார்த்ததற்குமேல் பத்து மடங்கு விசாலமாயிருந்தது அந்த உப்பரிகை. அதன் திறந்தவெளி ஒரு மாபெரும் நிலா முற்றம். அந்த முற்றம் ஒரு பெரிய வட்டமாக இருந்தது. அதைச் சுற்றி மேலே சுதையினால் அலங்கார வேலைப்பாடுகள் செய்த மாடம் வளைந்துசென்றது. அந்த வளைவான மாடத்தின் முகப்பிலே, அழகழகான பூங்கொடிகள் பின்னிக்கொண்டு படர்ந்திருந்தன. பூரணசந்திரனுடைய ஒளி அந்தத் திறந்த வெளியிலும்,



மாடத்திலும், பூங்கொடிகளிலும் வெள்ளியைப் பூசி மினு மினுத்துக் கொண்டிருந்தது! அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டே மறு பக்கம் திரும்பினால், நீலக் கருங்கடல். நிலவின் ஒளியில் வெள்ளிக் குழம்பைக் கொப்புளித்துக் கொண்டு 'ஓ' என்ற பேரானந்தமான கோஷத்தோடு கூத்தாடிக் கொண்டிருந்தது. கடலின் கரையிலே பல்லவ மன்னர்களின் சிற்பக் கனவு ஒரு தந்தக் கனவாக மணற் பரப்பிலே எழுந்து நின்றது!

இந்த அதிசயக் காட்சியைப் பார்த்து அநுபவித்துக் கொண்டே நிலா முற்றத்திலே நுழைந்து திரும்பினான் பூபதி. அங்கங்கே மாடத்தின் உம்பரில், யாத்திரிகர்கள் ஆகாயத்தைப் பார்த்தவாறு கண்களைத் திறந்தவண்ணம் திண்டுகளிலே தலையைச் சாய்த்துப் படுத்துக் கொண்டிருந்தார்கள். சித்திராங்க பூபதியும் அப்படியே ஓரமாக நடந்து சென்று ஒரு திண்டுக்கு அருகில் வந்து சாய்ந்தான்.

நிலாவையும், வானத்தையும், நீலக் கடலையும் பார்த்தவனாய், பேரியாழைப் பற்றிய சிந்தனைகளிலே மனத்தை ஓடவிட்டுக் கொண்டே, பிரயாணத்தின் களைப்பில் அப்படியே கிறங்கினான் சித்திராங்கன். உறங்கிப் போய் விட்டான். அவன் படுத்திருந்தது சாய்மானத் திண்டானதால், புரண்டு படுத்தபோது கழுத்தை உறுத்தியது. அப்பொழுதுதான் கண்ணை விழித்தான். ஆகாயத்தில் சந்திரன் ஒரே ஒளி வட்டமாக மிதந்து சென்று கொண் டிருந்தது. ஆனால் இதென்ன? 'டிங் டிங்' என்று யாரோ வாயினால் வீணைத் தந்திகளைப் போன்று ஒலி செய்கிறது கேட்கிறதே!

சித்திராங்கன் இமைகளைப் பொருத்தாமல் அந்த ஒலியைக் கேட்டான்! கட்ட நடு நிசிநேரத்தில் யாரோ வாயினால் ஒரு பண்ணை முனகிக் கொண்டே இடையிடையே 'டிங் டிங்' என்று சொல்வது கேட்டது! தலையைத் தூக்கிப் பார்த்தான். வரிசையாக எத்தனையோ யாத்திரிகர்கள் படுத்திருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் எங்கோ ஒரு மூலையிலிருந்து ஒலி வந்ததுபோல் இருந்தது. எழுந்து உட்கார்ந்து பார்த்தான். தெற்கு மூலையில் சித்தருடைய பிரம்பு சுவரிலே சாத்தியிருந்தது!

சித்தர்தான் இந்த ஒலியை முனகுகிறாரோ! ஆகா! எத்தனை ஸ்வர சுத்தமாக வருகிறது அந்தக் குரலோசை!

பூபதி மீண்டும் திண்டிலே சாய்ந்தவன், அப்படியே அந்த ஒலி மயக்கத்தில் கண்களை மூடி உறங்கி விட்டான்.

மறுபடியும் அவன் கண்ணை விழித்தபோது மீண்டும் அதே ஒலி கேட்டது. இப்பொழுது 'டிங் டிங்' என்ற ஓசை அத்தனை இல்லை. நன்றாகக் குரலிசையாகவே, வார்த்தைகள் ஏதும் இல்லாமல் வெறும் ஒலியாகவே உதயப் பண்ணை முனகிக் கொண்டிருந்தார் சித்தர்! இவன் திண்டிலிருந்து எழுந்து நன்றாகச் சம்மணம் போட்டு உட்கார்ந்து ஒலியைக் கேட்கத் தொடங்கினானோ இல்லையோ, குரல் நின்று விட்டது!

"என்ன தம்பி! எழுந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்? பிரயாணக் களைப்பு கொஞ்சங்கூட இல்லை போலிருக்கிறதே! உறங்கவே காணோமே!" என்றார் சித்தர்! அத்தனை யாத்திரிகர்களில் வேறு யாரும் விழித்ததாகத் தெரியவில்லை. நன்றாக உறங்கிக் கொண்டிருந்தார்களா அல்லது சித்தருக்குப் பயந்து போய்க் கண்களை மூடிக் கொண்டிருந்தார்களா என்று தெரியவில்லை.

"யாரோ பாடுவது போலக் கேட்டது! அதனால்தான்..." என்று பூபதி வார்த்தைகளை இழுப்பதற்குள், சித்தர் பளீர் என்று பதில் சொன்னார்.

"பாட்டா! இந்தப் பல்லவ ராஜ்யம் இன்று இருக்கிற நிலையில் பாட்டா! அவனவன் அவனவனுடைய பாட்டைப் பார்த்துக்கொண்டு போவதே கஷ்டமாக இருக்கிறது! பாட்டா!"

இந்தமாதிரிப் பதில் வந்ததும் பூபதிக்கு வாய் அடைத்தே போய் விட்டது.

'இல்லை. நீங்கள் ஏதோ ஒரு பண்ணை முனகினாற்போல இருந்ததே!' என்று கேட்கலாம் போலத் தோன்றியது. ஆனால் வார்த்தை வராமல் தொண்டை அடைத்துக் கொண்டது!

'என்ன விசித்திர சித்தராக இருக்கிறார் இவர்! சங்கீதம் கூட இவருக்கு நன்றாகத் தெரியும்போல் இருக்கிறதே!

நிச்சயம் பேரியாழைப் பற்றியும் இவருக்குத் தெரிந்துதான் இருக்கும்! ஆனால் இந்தச் சித்தரோடு வார்த்தையைக் கொடுத்து விட்டுப் பிறகு மாட்டிக் கொண்டால் பெரும் பாடாக அல்லவா போய் விடும் போலிருக்கிறது!'

இவ்வாறு நினைத்தான் பூபதி. 'என்றாலும் காலையில் எழுந்ததும், அவரைத் தனியாகப் போய்ச் சந்தித்து நயமும் பயமுமாகக் கேட்டுப் பார்க்கலாம். ஒரு வேளை, ஒரு வேகத்தில் சொன்னாலும் சொல்லி விடுவார்.'

இப்படி நினைத்துக் கொண்டே, விடிய இன்னும் சற்று நேரந்தானே இருக்கிறது என்று, திண்டிலிருந்து தலையை எடுத்துக் கீழே யிருந்த மெதுவான அணையில் வைத்தவாறு இமைகளை மூடினான் சித்திராங்கன். உறங்கிப் போய் விட்டான்!

மறுநாட் காலை பூபதி கண்ணைத் திறந்தபோது அந்தமாடத்தில் சூரியன் 'சுளீர்' என்று காய்ந்து கொண்டிருந்தான். சுற்றி வர யாருமே இல்லை. இவன் மட்டுந்தான் இத்தனை நேரம் உறங்கி யிருக்கிறான்! பூபதிக்கு மிகவும் அவமானமாகப் போய் விட்டது. அப்படியே வெகு துரிதமாக விழுந்தடித்துக் கொண்டு எழுந்திருந்தான்.

சித்தர் எங்கே?—இந்தக் கேள்வி ஒன்றே பூபதியை ஆட்கொண்டது.

மாடத்திலிருந்து கீழே வந்ததும் முதலாவது காரியமாகப் பூபதி குறுக்கும் நெடுக்குமாக நடந்து சித்தர் எங்காவது கண்ணிலே படுகிறாரா, அல்லது அவருடைய அந்தப் பிரம்பாவது எங்காவது தென்படுகிறதா என்று பார்த்தான். எங்குமே காணோம்!

'விறு விறு' என்று நேரே விடுதியின் நிர்வாக அறைக்குள்ளே நுழைந்தான் சித்திராங்கன். விடுதித் தலைவனிடம் போய்க் கேட்டான், "ஐயா! நேற்று இரவு இங்கே வந்தாரே சித்தர் அவர் எங்கே? தயவுசெய்து சொல்ல முடியுமா?" என்று.

"சரியாய்ப் போயிற்று!" இந்தக் கேள்விக்கு உலகத்திலேயே யாராலும் பதில் சொல்ல முடியாது. சித்தன் போக்கு சிவன் போக்கு என்று கேள்விப்பட்டதில்லையா!" என்று முற்றுப் புள்ளி வைத்தான் விடுதியின் தலைவன்.

பூபதிக்குக் கொஞ்ச நேரம் ஒன்றுமே ஓடவில்லை. மாமல்லபுரத்துக்கு வந்ததுமே தனக்கு இசையைப் பற்றியும், பேரியாழைப் பற்றியும் தெரிந்து கொள்ள ஒரு அரிய வாய்ப்பு இந்தச் சித்தர் மூலமாகக் கிடைத்து விட்டது என்று கனவு கண்டானே! அது வீண் எண்ணந்தானா? அப்படியானால் இனிக் காஞ்சிமா நகரத்துக்குப் புறப்பட வேண்டியதுதானா?

காஞ்சிமா நகரம்! பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகரம். இந்த மாமல்லபுரம் என்ற துறைமுகப் பட்டினத்தில் ஏற்பட்ட அநுபவங்களே இத்தனை விசித்திரமாக இருந்தால், அந்தத் தலைநகரத்து அநுபவங்கள் எப்படியிருக்குமோ? அந்த நகரத்துக்கு எப்படிச் செல்வது? இனி அங்கிருந்து எங்கெல்லாம் சுற்ற வேண்டியது ஏற்படுமோ? தன்னிடம் ஒரு குதிரை இருந்தால் எத்தனை சௌகரியமாக இருக்கும்! வலம்புரித் தீவில் உள்ள விடுதியில், பாழடைந்த ஒரு இடத்திலே, யாத்திரிகர்களுக்காகக் குதிரை வசதி செய்து கொடுக்கும் ஒரு புரவிக் கூடம் இருந்ததும், அது இன்று இடிந்து தரைமட்டமாகக் கிடப்பதும், பூபதிக்கு ஞாபகம் வந்தன. இந்தப் பட்டினத்திலும் இந்த விடுதியிலும் அப்படி ஒரு வசதி நிச்சயம் இருக்கத்தான் வேண்டும். அதைப் பிறகு பார்த்துக் கொள்ளுவோம். இந்த மாமல்ல புரத்துச் சிற்பங்களிலே யாழைப் பற்றிய கல்வெட்டுக்கள், ஏதாவது பயனுள்ள செய்திகள், இருக்குமா என்று முதலில் தெரிந்து கொண்டு வரலாம்.

இவ்வாறு ஒரு முடிவுக்கு வந்தான் பூபதி. அப்படியே விரைவாகச் சென்று குளிப்பையும், காலை உணவையும் முடித்துக் கொண்டு கடற்கரையை நோக்கி நடந்தான்.

நேற்றுத் துறைமுகத்தில் வந்து இறங்கியதுமே, சூரிய வெளிச்சத்தில் இந்தச் சிற்பங்களை யெல்லாம் பார்க்க வேண்டும் என்று நினைத்தான் அல்லவா? அந்தச் சிற்பங்களை இப்பொழுது சூரிய வெளிச்சத்தில் பார்த்தான் சித்திராங்கன். வலம்புரித் தீவிலே உள்ள சிற்பங்களை அப்படியே இங்கே பெயர்த்துக் கொண்டு வந்தார்களா, அல்லது இங்கிருந்து அங்கே பெயர்த்துக்கொண்டு போனார்களா?—இப்படி ஒரு பெரிய வியப்பில் மூழ்கிய

வளை அந்தக் கல்லாலான கனவு உலகிலே சஞ்சரித்துக் கொண்டிருந்தான் சித்திராங்கன். சற்றுத் தொலைவில் ஐந்தாறு பேர் ஒரு பாறையின் மேல் உட்கார்ந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தது தெரிந்தது. தன்னைப் போல யாத்திரிகர்களாக இருக்கக் கூடும் என்று சந்தேகித்து நின்று கொண்டிருக்கும் போதே, பாறை வெளியில் திடீர் என்று குமிழ்க் கட்டையின் ஒலி கேட்டது! 'டக் டக்' என்று பிரம்பின் ஓசையும் பின் தொடர்ந்தது! அவ்வளவு தான்; பாறையிலே உட்கார்ந்திருந்த மனிதர்கள் பதற்றத் தோடெழுந்தார்கள். சித்திராங்கன் திரும்பிப் பார்ப்பதற்குள் குமிழ்க் கட்டையின் ஓசை அவனுக்கு அருகிலே வந்து நின்றது.

"என்ன தம்பி! அந்தக் கூட்டத்தையே பார்த்துக் கொண்டு நின்று விட்டாய்? அவர்கள் எல்லாம் கலைஞர்கள். சங்கீத வித்துவான்கள். இன்று ராஜ்யம் இருக்கிற நிலையில் கலையாவது களி மண்ணாவது! சங்கீதம் எல்லாம் சர்க்கரைப் பொங்கல்! தெரிந்ததா! அரசாட்சி என்றால் மாந்தோப்பு விளையாட்டில்லை தம்பீ! சமர் பூமி இது! வாத்ய வித்யாதர மகாராஜாவோடு வாத்ய வித்தை சரி! இனிமேல் நம்முடைய நந்தி வர்மர் தலையெடுத்துப் பிள்ளைப் பிராயத்தைத் தாண்டி, யுத்தங்களை யெல்லாம் வென்று வெற்றியை நிலை நாட்டி, அதன் பிறகு அல்லவா சங்கீத வித்துவான்களைக் கவனிக்க வேண்டும்! அதுவரை வித்துவான்களுக்கு உரிய இடம் அந்தப் பாறைதான்! அதுவரை பேரியாழுக்கு உரிய இடம் கொடும்பாளூர் தான்! சந்தேகமிருந்தால் அந்த வித்துவான்களிடமே போய்க் கேளேன்!"

இவ்வாறு சொல்லிவிட்டு 'டக் டக்' என்று குமிழ்க் கட்டையை மிதித்துக் கொண்டு, பிரம்பைச் சுழற்றியவாறு மேலே நடந்தார் சித்தர். ஒரு வினாடி தாமதிக்கவில்லை.



'பேரியாழ்' 'கொடும்பாளூர்' இந்த இரண்டு வார்த்தைகளும் சித்திராங்க பூபதிக்கு ஒரு பெரிய அதிர்ச்சியைத் தந்தன. கொடும்பாளூர்தானே ஆதிரையனுடைய ஊர். தன்னோடு கடற் பிரயாணம்செய்த அந்த உத்தமமான ராஜ குமாரனுடைய ஊர் அல்லவா கொடும்பாளூர். பேரியாழுக்கு உரிய இடம் கொடும்பாளூர் என்றாரே இந்தச் சித்தர்! என்ன அதிசயமான செய்தி இது! பேரியாழ் கொடும்பாளூரிலேதான் இருக்கிறதா? இந்தச் செய்தி உண்மையாக இருக்குமா? இந்தச் சித்தர் நேற்று மாலையிலிருந்து எங்குபோனாலும் பின் தொடர்கிறாரே! ஏதோ உளவு அறிந்து சொல்லுகிற மாதிரி, தன்னைப் பற்றிய செய்திகள் எல்லாம் தெரிந்தவர் மாதிரி, ஒவ்வொரு சமயம் ஒரோரு வார்த்தைகளைப் போடுகிறாரே! மந்திரநாயகம் ஒற்றர்களைப் பற்றி எத்தனை தூரம் தனக்கு எச்சரிக்கை செய்திருக்கிறார்! இவர் ஏன் அம்மாதிரி ஒரு ஒற்றராக இருக்கக் கூடாது? இல்லையென்றால் இவர் ஏன் தன்னை இப்படி வளைத்து மடக்கிக் கொண்டு பின்தொடர வேண்டும்? தன்னைப் பற்றி இவருக்கு ஏதேதோ தெரிந்திருக்கிறதே! திடீர் திடீரென்று வந்து தன்னை இப்படிக் குழப்பியடிக்கிறாரே? ஆனால் மனிதரைப் பார்த்தால் ஏமாற்றுக்காரர் மாதிரியும் தெரியவில்லை. தன்னுடன் அன்போடு, கருணையோடு, பேசுகிறவர் மாதிரித்தான் இருக்கிறது. என்றாலும் யாரையும் நம்பக் கூடாது. அன்போடு பேசுகிறவர்களையுங் கூட நம்பக் கூடாது என்றல்லவா மந்திரநாயகம் சொல்லியிருக்கிறார்.

இப்படி அந்த மாமல்லபுரப் பாறையிலே நின்றவாறு சித்திராங்கன் ஏதேதோ யோசனை செய்து குழம்பிக் கொண்டிருந்த சமயம், அவனை நோக்கி வேகமாக யாரோ ஒரு வீரன் குதிரையில் வருவது தெரிந்தது. (தொடரும்)

# மேலும் மலிவானது!

PROTEX All Purpose TOILET POWDER

## குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ரம்மிய மணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியா வெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

## இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

குணம் உத்தரவாதம் கால்கேட் பாமாலிவ் அளிக்கிறது




# ப்ரோடெக்ஸ்

## சர்வப்பிரயோக வாசனைப்பௌடர்

PTP/6/3




# ஓவல்டின்

திரும்ப ஆரோக்யத்தைப் பெற அவளுக்கு உதவுகிறது!

ஜுரத்திற்குப் பின் ஏற்பட்ட சோர்வு, உடல் இளைப்பிலிருந்து அவள் மெச்சத்தக்க முறையில் மீண்டு வருகிறாள். கூடிய விரைவில் அவளை ஓவல்டின் அருந்தி வரும்படி டாக்டர் யோசனை கூறினார். இப்போது அவள் வேகமாக உடல் பலம் பெற்று வருகிறாள். போஷாக்கு நிறைந்துள்ள "ஓவல்டின்" அனாரோக்கியத்திலிருந்து மீட்டு வருகிறது.

"ஓவல்டின்" சிறந்த இயற்கை ஆகாரச் சத்துக்களிலிருந்து தயாரிக்கப்படுகிறது. இத்துடன் பி.டி. வைட்டமின்கள் சேர்த்து உற்பத்தியாகிறது. அதன் மனங்கவர் நறு மணம், அசக்தர்களாலும் சுலபமாக ஜீரணிக்கப்படக் கூடிய தன்மை ஆகிய உண்மைகளின் காரணமாக, ஆரோக்கியமிழந்தவர்களுக்கு இது இன்றியமையாததாகிறது. ஆகவே "ஓவல்டின்" ஆஸ்பத்திரிகளிலும், நர்ஸிங் விடுதிகளிலும் உபயோகிக்கப்படுகிறது. உலகெங்கும் டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுகிறது.

"ஓவல்டின்" ஒன்றையே கேளுங்கள். போலிகளை மறுத்து விடுங்கள்.




வியாதியால் சோர்ந்த பிறகு ஆரோக்யம் பெற

# ஓவல்டின்

விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ. (இந்தியா) பிரைவேட் லிமிட்.

சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8-30 வரை ரேடியோ சிலோனில் ([illegible] 41.72 மீட்டர்கள்) ஓவல்டின் அமெச்சூர் நேரத்தைக் கேளுங்கள்.

IV. 442

# காதை -  பேட்டி

விடாக்கண்டர்

"ஸாஞ்சிக்குப் போகட்டுமா, அல்லது காஞ்சிக்குப் போகட்டுமா?" என்று ஆசிரியரைக் கேட்டேன்.

"ஸாஞ்சியிலே உமக்கு என்ன வேலை?" என்று கேட்டார் ஆசிரியர்.

"புத்தர்பிரானின் ஜயந்தி விழாவைப் பார்க்கத்தான்! அங்கே பற்பல தேசங்களிலிருந்து ஏராளமான பேர் வந்து கூடப் போகிறார்களாம்" என்றேன்.

"அப்படியானால் நீர் போக வேண்டாம்; ரயிலில் இப்போதுள்ள இட நெருக்கடியே போதும்" என்றார் ஆசிரியர்.

"காஞ்சிக்காவது போய் வரட்டுமா?" என்று கேட்டேன்.

"காஞ்சியிலே என்ன விசேஷம்?"

"அங்கே இம்மாதம் நடைபெற இருக்கும் சர்வோதயப் பெருவிழாவுக்குத்தான். பூதான இயக்கத்தின் பிதாவான ஆசாரிய வினோபாஜீ சர்வோதயத் திருவிழாவின் போது காஞ்சிக்கு விஜயம் செய்யப் போகிறார். வினோபாஜியின் அற உரைகளையும் அறிவுரைகளையும் கேட்கப் போகிறேன். அப்படியே இன்னொன்றையும் கேட்கப் போகிறேன்."

"இன்னொன்றா? அது என்ன?" என்று ஆச்சரியத்துடன் வினவினார் ஆசிரியர்.



"பூதானம்!" என்றேன்.

"அதைக் கேட்கத்தானே அவர் தமிழ் நாட்டுக்கு வந்திருக்கிறார்!" என்றார் ஆசிரியர்.

"ஆமாம்; நிலம் படைத்தவர்களிடமிருந்து பூதானம் பெற்று அந்த நிலங்களை நிலமில்லாத ஏழைகளுக்குப் பகிர்ந்தளிப்பதல்லவா வினோபாஜியின் லட்சியம். பூதானம் பெற வேண்டிய ஏழைகளில் அடியேனும் ஒருவன்!" என்றேன்.

"விடாக் கண்டரே! நீர் பலே பேர்வழி! உமக்குப் பேனவினால்தானே உழத் தெரியும்? ஏர் பிடித்து உழத் தெரியாதே! ஏர் பிடித்து உழும் ஏழை விவசாயிகளுக்குத் தான் வினோபாஜி அந்த நிலங்களைக் கொடுப்பார். ஆகையால் நீர் போய் அவருடைய உபதேசங்களை மட்டும் கேட்டுக் கொண்டு வாரும். வேறு ஒன்றும் கேட்க வேண்டாம்" என்று சொல்லி அனுப்பினார் ஆசிரியர்.

நேராகத் திருவள்ளூருக்குப் பாய்ந்து சென்றேன். வினோபாஜியின் தமிழக யாத்திரையில் முதல் முதலாக அவர் பாத ஸ்பரிசம் பெறும் பாக்கியம் பெற்ற புண்ணிய க்ஷேத்திரம் திருவள்ளூர்தான். என்னைக் கண்டதும் வினோபாஜி, "வந்து விட்டாயா! ரொம்ப சந்தோஷம்; பூதான யாத்திரையில் நீயும் கலந்து கொண்டது பற்றி மிக்க மகிழ்ச்சி" என்றார்.

இதற்குள் சென்னை முதல் மந்திரி காமராஜரும் இன்னும் பல பிரமுகர்களும் பூர்ண கும்பத்துடன் வினோபாஜியை வரவேற்று உபசரித்தார்கள். ஐம்பதாயிரம் ஏக்கரா நிலத்துக்கான பத்திரங்களையும் பூதான பிதாவிடம் சமர்ப்பித்தார்கள். பிறகு நான் வினோபாஜியை நெருங்கி, "ஆசாரியஜி! பத்திரம்! பத்திரம்!" என்றேன். மகரிஷி வினோபா "என்ன, நீ வேறு பத்திரம் கொடுக்கப் போகிறாயா? எத்தனை ஏக்கர் நிலம்?" என்று என்னிடம் விசாரித்தார்.

"நான் கொடுக்கப் போவதில்லை. அந்தப் பத்திரங்களெல்லாம் 'பத்திரம் ஜாக்கிரதை!' என்று சொன்னேன்" என்றேன்.

"அதெல்லாம் என்னிடம் வந்த பிறகு பத்திரமாகவே இருக்கும். நிலம் போய்ச் சேர வேண்டியவர்களுக்குச் சேர்ந்து விடும். நீ கவலைப் படாதே" என்றார்.



"விடக் கூடாது! விடக் கூடாது!" என்றேன்.

"எதை விடக் கூடாது?" என்றார் வினோபாஜி.

"இந்த ஐம்பதாயிரம் ஏக்கரா நிலத்தோடு விடக் கூடாது. குறைந்தது ஐம்பது லட்சம் ஏக்கராவது தமிழகத்தில் நன்கொடையாகப் பெறவேண்டும்" என்றேன்.

"அதில் பாதி கிடைத்தாலும் போதும்; எனக்குத் திருப்தியே" என்றார் வினோபாஜி. பிறகு, "சரி, நாளைக்கு அடுத்த ஊருக்குக் கால்நடையாகவே செல்லப் போகிறேன். நீயும் என்னுடன் பாத யாத்திரையில் கலந்து கொள்கிறாயா?" என்றார் வினோபாஜி.

தலைக்கு மேல் 109 டிகிரி வெயில் சக்கைப் போடு போட்டுக் கொண்டிருந்தது. இதில் பாதயாத்திரை செய்தால் பரலோக யாத்திரைதான் கிட்டும்; அத்துடன் இவருடன் யாரால் ஓட முடியும்? 'நமது முதல் மந்திரி காமராஜரே இவருடன் நடக்க முடியாமல்

கனைத்து விட்டாரே!' என்று எண்ணிக் கொண்டு 'ஆகட்டும்' என்று மழுப்பி விட்டு அப்பால் நழுவி விட்டேன்.

நேரே தில்லிக்குப் பறந்து சென்றேன்.

நேருஜியிடம் சென்று "ஆஹ்ஹாஹ்" என்றேன்.

"இதென்ன பாஷை? இந்தியா, உர்துவா, ருஷ்ய பாஷையா? என்ன பாஷை?" என்று கேட்டார் நேருஜி.

"இது உலக மக்களுக்கெல்லாம் பொதுவான பாஷை! நிட்சண்யமான வெயில் தகிக்கும் போது அதன் கடுமை தாங்காமல் எல்லாருமே இப்படித்தான் "ஆஹ்ஹஹ்" என்பார்கள்" என்றேன்.



"உங்கள் தமிழ் நாட்டில் இப்போது எத்தனை டிகிரி வெயில்? ரொம்ப அதிகமோ?" என்று கேட்டார் நேருஜி.

"சில அரசியல் வாதிகளும் தலைவர்களும் பிதற்றுவதிலிருந்தே வெயில் அதிகமாயிருக்க வேண்டுமென்பது தங்களுக்குப் புரிந்திருக்க வேண்டுமே!" என்றேன்.

"பொதுவாகப் பிதற்றல் எல்லா இடங்களிலுமே இருக்கிறது" என்றார் நேருஜி.

"ஓகோ! அப்போது பொதுவாகவே எல்லா இடங்களிலும் வெயில் அதிகமாய்த்தான் இருக்க வேண்டும்!" என்றேன்.

"விடாக்கண்டரே! தட்சிணப் பிரதேசம் அமைக்கும் விஷயம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டார் நேருஜி.

"தட்சிணப் பிரதேசத்துக்கு விரோதமாக இப்போது சென்னையில் ஒருவரும் பிதற்றுவதில்லை" என்றேன்.

"ஏன்?" என்று கேட்டார் நேருஜி.

"எல்லாரும் மலை வாசஸ்தலமான உதகமண்டலத்துக்குப் போயிருக்கிறார்கள். அங்கே வெயில் கிடையாதல்லவா?"

இதற்குள் நேருஜி தமது "ஏர்கண்டிஷன்" அறைக்குள் போய் விடவே நான் ருஷ்யாவுக்குப் பறந்து சென்றேன். ருஷ்யத் தலைவர்கள் புல்கானினும், குருஷேவும் என்னைக் கண்டு விட்டுக் குதூகலத்துடன் குதித்தார்கள். "நேருஜி சௌக்கியமா? பஞ்சசீலம் சௌக்கியமா?" என்று விசாரித்தார்கள்.

"நேருஜி ரொம்ப சௌக்கியம். பஞ்சசீலம் கொஞ்சம் சௌக்கியம்" என்றேன்.

"ஆமாம், லண்டனில் ஆயுதப் பரிகரண மகாநாடு நடத்தினீர்களாமே? எல்லா ஆயுதங்களையும் விட்டு விட்டார்களா?" என்று கேட்டேன்.

குருஷேவ், "இல்லை தம்பி, இல்லை. மகாநாட்டைத்தான் விட்டு விட்டோம். மகாநாட்டினால் ஒரு பலனும் விளையவில்லை" என்றார்.

"ஏன்?"

"பிரிட்டன், பிரான்ஸ், கானடா, அமெரிக்கா, ருஷ்யா ஆகிய ஐந்து நாட்டுப் பிரதிநிதிகளும் மார்ச்சு மாதம் லண்டனில் கூடினார்கள். வாரக் கணக்கில் மகாநாடு நடத்தினார்கள். அந்தந்த தேசங்களிடம் உள்ள ஆயுதங்களை ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் குறைத்துக் கொள்ள வேண்டுமென்று ஓயாமல் பேசினார்கள். ஆனால் அமெரிக்கா ஒரு யோசனைக்கும் இணங்கி வரவில்லை" என்றார்.

"இதென்ன இப்படிச் சொல்கிறீர்கள்? அமெரிக்கா தன்னுடைய ஆயுதங்களைக் குறைத்துக் கொண்டுதானே இருக்கிறது?" என்றேன்.

"குறைத்துக் கொண்டிருக்கிறதா! அதெல்லாம் சுத்தப் பொய்" என்றார் குருஷேவ்.

"பொய்யல்ல, நிஜமாகத்தான் சொல்கிறேன். அமெரிக்கா தன்னுடைய ஆயுதங்களை வட அட்லாண்டிக் உடன்படிக்கை நாடுகளுக்கும், பாகிஸ்தானுக்கும் அனுப்பிக் குறைத்துக் கொண்டிருக்கிறது!" என்றேன்.

குருஷேவ் இடி இடி யென்று சிரித்து விட்டு, "தம்பி! விஷயத்தைக் கேள். லண்டன் மகாநாட்டில் அணு குண்டு ஹைட்ரஜன் குண்டுகள் விஷயத்தைத் தனியாகவும் இதர ஆயுதங்கள் விஷயத்தைத் தனியாகவும் பேசித் தீர்க்கலாம் என்று நாங்கள் யோசனை கூறினோம். அமெரிக்கா அதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. அமெரிக்கா ஒரு திட்டத்தை வெளியிட்டு, 'இதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?' என்று எங்களைக் கேட்டது. நாங்கள் சரி என்றோம். நாங்கள் ஒப்புக் கொண்டு விட்டதால் அதில் ஏதோ ஒரு சூழ்ச்சி இருக்க வேண்டுமென்று அமெரிக்கா சந்தேகித்து அந்த யோசனையைக் கைவிட்டது. இப்படியே எந்த யோசனைக்கும் இணங்கி வராமல் செக்குமாடு மாதிரி வாரக்கணக்கில் சுற்றிச் சுற்றி வந்தோம். ஆகவே மகாநாடு எந்த ஒரு முடிவுக்கும் வராமல் இனிது முடிந்தது" என்றார்.

"பேஷ்! அதுதான் சரி; உலகம் சுற்றுகிறது. நீங்களும் சுற்றுகிறீர்கள். இப்போது நானும் சுற்றிக் கொண்டிருக்கிறேன். இப்படி எல்லாரும் ஆனந்தமாகச் சுற்றிக் கொண்டே இருப்போமாக!" என்று கூறிவிட்டு ஊர் திரும்பினேன்.

## தக்ஷிண ரயில்வே

# கோதாவரி புஷ்கரம் திருவிழா

## 1-5-56 முதல் 2-6-56 வரை

### புஷ்கரம் ஸ்நான தினங்கள் : 22-5-56 முதல் 2-6-56 வரை

புஷ்கரம் திருவிழாவிற்குச் செல்லும் பிரயாணிகளின் சௌகரியத்திற்காக ராஜ மஹேந்திரம், கோதாவரி மற்றும் கொவ்வூரு ஸ்டேஷன்களுக்கு, இந்த ரயில்வேயில் மேற்படி ஸ்டேஷன்களிலிருந்து 500 மைல் தூரத்திற்குள் இருக்கும் எல்லா ஸ்டேஷன்களிலிருந்து 2-வது மற்றும் 3-வது வகுப்புகளுக்கு இரண்டு ஒற்றைப் பிரயாணக் கட்டணங்களில் ரிட்டர்ன் டிக்கட்டுகள் வழங்கப்படும்.

ஆனால் ரிட்டர்ன் டிக்கட்டுகள் கோதாவரியிலிருந்து கொவ்வூருக்கும், கொவ்வூரிலிருந்து கோதாவரிக்கும் கொடுக்கப்படமாட்டாது.

மேலும் இந்த ரிட்டர்ன் டிக்கட்டுகள் மெயில் மற்றும் எக்ஸ்பிரஸ் வண்டிகளில் விஜயவாடா - விசாகப்பட்டினம் பிரிவில் பிரயாணம் செய்வதற்காகக் கீழ் குறித்த பிரிவுகளில் உள்ள ஸ்டேஷன்களிலிருந்து வழங்கப்பட மாட்டாது. 'ஆர்டினரி' ரிட்டர்ன் டிக்கட்டுகள் மட்டுமே வழங்கப்படும்.

1. விசாகப்பட்டினம் - விஜயவாடா (இரண்டு ஸ்டேஷன்களும் உள்பட)
2. மசூலிப்பட்டினம் - குடிவாடா - விஜயவாடா ..
3. பீமாவரம் - குடிவாடா ..
4. நிடதவோலு - நரசப்பூர் ..
5. சாமல்கோட் - காக்கிநாடா துறைமுகம் ..
6. விஜயவாடா - குண்டூர் ..

2. இந்த ரிட்டர்ன் டிக்கட்டுகள் 25-4-1956 முதல் 2-6-1956 (இரு தினங்கள் உள்பட) வரை வழங்கப்படும். இவைகளைக் கொண்டு பின் குறிப்பிட்ட விதம் பிரயாணத்தை முடித்துக்கொள்ள வேண்டும்.

**திரும்பும் பிரயாணத்தை நள்ளிரவில் முடித்துக்கொள்ள வேண்டிய தேதி**

| | | | |
|---|---|---|---|
| i | 50 மைல்களுக்குள் சேர வேண்டிய இடமிருந்தால் | முன்னதாக வழங்கிய டிக்கட்டுகளின் விஷயத்தில் வழங்கப்பட்ட தேதி அல்லது வெளியேசெல்லும் பிரயாணத்தை தொடங்கும் தேதியைத் தொடர்ந்து... | 2வது நாள் |
| ii | 51 முதல் 150 மைல்களுக்குள் சேரவேண்டிய இடமிருந்தால் | ஷை | 3வது நாள் |
| iii | மேற்படி 151 முதல் 250 மைல்களுக்குள் இருந்தால் | ஷை | 4வது நாள் |
| iv | மேற்படி 251 முதல் 350 மைல்களுக்குள் இருந்தால் | ஷை | 5வது நாள் |
| v | மேற்படி 351 முதல் 500 மைல்களுக்குள் இருந்தால் | ஷை | 6வது நாள் |

3. மூன்று வயதுக்கு மேல் 12 வயதுக்குள் இருக்கும் குழந்தைகளுக்கு மேற்படி கட்டணங்களில் பாதி கட்டணம்.

4. இந்த ரிட்டர்ன் டிக்கட்டுகளுக்கு அட்வான்ஸ் புக்கிங்கும் ரிசர்வேஷனும் 'ஆர்டினரி' ஒற்றைப் பிரயாண டிக்கட்டுகளைப் போலவே அனுமதிக்கப்படும். ஆனால் எக்காரணத்தைக் கொண்டும் வெளியே செல்லும் பிரயாணத்தை 2-6-56 நள்ளிரவுக்குப் பின் தொடங்கக் கூடாது.

5. இந்த ரிட்டர்ன் டிக்கட்டுகளில் பிரயாணத்தை இடையில் நிறுத்திச் செல்ல அனுமதிக்கப்பட மாட்டாது.

6. இந்த டிக்கட்டுகளின் செல்லுபடி காலம் நீடிக்கப்பட மாட்டாது.

7. விவரங்களுக்குச் சம்பந்தப்பட்ட ஸ்டேஷன் மாஸ்டரை விசாரிக்கவும்.

**பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறைதான் இந்தத் திருவிழா வருகிறது. கோதாவரியில் புண்ணிய ஸ்நானம் செய்யுங்கள்**

மதராஸ்

**சீப் கமர்ஷியல் சூபரின்டெண்ட்**

● திருச்சி ஜில்லா முசிரி தாலூகா முருகூர் கிராமம், மிராசுதார் **ஸ்ரீ எஸ். டி. பி. மாரிமுத்து பிள்ளை** அவர்கள் தன்னுடைய 52-வது வயதில் 12-4-56ல் தெய்வீக மடைந்தார். அன்னார் தன் 14-வது வயதில் காங்கிரஸ் அறைகூவலுக்கிணங்கிப் பள்ளியை விடுத்து வெளியேறிய பின்னர், ஆயுள்வரை அதி தீவிர காங்கிரஸ் காரரும் ஏழை பங்காளனும் ஆக இருந்தார். சென்னை சட்டசபையில் அங்கத்தினராகவும் மாகாண காங்கிரஸ் கமிட்டியில் அங்கத்தினராகவும் முசிரி தாலூகா காங்கிரஸ் தலைவராகவும் இருந்தார். திருச்சி ஜில்லா போர்டு தலைவராகவும் இருந்தார். மிகவும் சோபிதமான பொது வாழ்க்கை நீண்டகால சரீர அசௌகரியத்தால் தடைபட்டது. அன்னாரின் அகால மறைவு அவர் குமாரர்களான திரு எம். ரெங்கனாதன் B. A., திரு எம். சுந்தரம் B. Sc. (Agx) அவர்களுக்கும் மற்றும் ஏராளமான நண்பர்கள் பந்துக்கள் முதலான யாவர்களுக்கும் மிகுந்த துக்ககரமாகும். அன்னாரின் ஆத்மா சாந்தியடையுமாக.



மா. ரெங்கனாதன், மா. சுந்தரம்





# ஊர்மிளா

எஸ். ரங்கநாயகி



"லக்ஷ்மணா!"

குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தார் லக்ஷ்மணர். சுமித்திரை தான் கூப்பிட்டாள். லக்ஷ்மணருக்குப் பயம் வந்து விட்டது. அருமை அண்ணனுடன் காட்டுக்குச் செல்ல அனுமதி கொடுத்த தாய், மறுபடி கூப்பிடுகிறாளே! புத்திர பாசம் அவளை ஆட்கொண்டு, விடை கொடுத்த வார்த்தையை மாற்றக் கூப்பிடுகிறாளோ!

"லக்ஷ்மணா! நேராக ஊர்மிளையிடம் தானே போகிறாய்!" என்றுதான் கேட்டாள் சுமித்திரை. லக்ஷ்மணரின் முகத்தில் வெட்கம் பரவியது. தலையை மட்டும் அசைத்தார்.

"இதோ பார், ஊர்மிளை குழந்தை. அவளைப் பயப்படுத்தி விடாதே. 'நானும் வனத்துக்கு வருகிறேன்' என்று கிளம்பி விடப் போகிறாள். அதற்கு இடம் வைக்காமல் விடைபெற்றுக்கொள்.... இல்லாவிடில் நீ நேராகப் போய் விடு. நானே அவளிடம் சமாதானமாகச் சொல்லி விடுகிறேனே" என்றாள் சுமித்திரை.

லக்ஷ்மணருக்கு இது இஷ்டமில்லை. பிரிய மனைவியிடம் தானே விஷயத்தைக் கூற வேண்டும். 'நானும் வருகிறேன்' என்று அவள் குதிப்பாள். முதலில் அவளிடம் கோபித்து, பிறகு கெஞ்சி, கொஞ்சிக் காட்டுக்குப் போகும் கடைசி நேரத்தில் சிறிது விளையாட அவருக்கு ஆசை. அதனால் தாயிடம், "நீங்கள் கஷ்டப்பட வேண்டாம், அம்மா! நானே சமாதானமாகப் பேசி விடைபெறுகிறேன்" என்றார். சுமித்திரையும் அவருடைய விருப்பத்தைத் தடுக்கவில்லை.

லக்ஷ்மணர் ஊர்மிளையின் வீட்டை அடைந்த போது, அவள் சர்வாலங்கிருத பூஷணியாய் சிரித்த முகத்துடன் வரவேற்றாள். "வரணும், ஏது இந்நேரத்தில் அபூர்வமாய்..." இளம் புன்னகை முகத்தில் அரும்பி இருந்தது.

"காட்டில் திரியும் மான்களின் சித்திரமொன்றைக் கண்டேன். திடீரென காட்டில் இருக்கும் மானின் நினைவு வந்து விட்டது. புறப்படும்போது நீ வளர்க்கும் கிளியைத் துணைக்குக் கூப்பிட்டேன். ஆனால் அதுவோ உன்னெதிரில் வரவே வெட்கப்படுகிறது. ஊர்மிளா! ஒரு சந்தேகம். இந்த பிரமன் மானுக்கும் கிளிக்கும் சர்வ பங்கத்தை உண்டாக்க உன்னை ஏன் சிருஷ்டித்திருக்கிறான்!" என்றார் லக்ஷ்மணர். கொஞ்சி, சிரித்துப் பேசி மெதுவாக விஷயத்தைக் கூற அவர் விருப்பம்.

ஊர்மிளை சிரித்தாள். பிறகு, "அப்பாடி! மனத்துக்குத் துளி சாந்தி கிடைத்தது. தமையனுடன் வனத்தில் திரியும்போது மானினத்தையும் கிளியினத்தையும் பார்க்கும் போதாவது என் நினைவு உங்களுக்கு வருமே" என்றாள்.

லக்ஷ்மணர் திடுக்கிட்டார். இவளுக்கு விஷயம் தெரிந்து விட்டதா! அப்படியானால் இவ்வளவு சாந்தம் முகத்தில் இருப்பதன் காரணம்! கணவனைக் காட்டுக்கு அனுப்பும் பெண்ணின் முகம் இவ்வளவு நிர்மலமாக இருக்குமா! ஆனால் அப்பொழுதும் லக்ஷ்மணர் விஷயத்தை உடனே வெளியிடச் சற்றுத் தயங்கினார்.

"ஊர்மிளா! மானையும் கிளியையும் பார்க்கும் போது உன் சௌந்தர்யத்தின் நினைவு மட்டும் வரும். ஆனால் உன்னிடமுள்ள அன்பு எப்பொழுதும் நினைவில் இருக்கும்" என்று கூறினார் லக்ஷ்மணர்.

"அப்படியானால் நான் மகா பாக்கியசாலி தான். ஆனால் அத்துடன் மற்றொன்றும் நினைவிருக்க வேண்டும். என்னிடம் கொண்டுள்ள அன்பு தமையனுடைய சேவையில் விக்னத்தைப் போடக் கூடாது" என்றாள். ஊர்மிளையின் முகத்தில் சற்று வேதனைக் குறி பரவியிருந்ததை அப்பொழுது நன்றாகக் கவனித்தார் லக்ஷ்மணர்.

"ஊர்மிளா! நீ பேசும் விதத்தைப் பார்த்தால் உனக்கு விஷயம் முன்பே தெரிந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. நகரம் முழுவதும் பரவிவிட்ட விஷயம் உனக்குத் தெரியாமலிருக்க நியாயமில்லைதான். ஆனால் அண்ணன் அடி பின்பற்றுவதை என் வாயினாலேயே சொல்லி விடைபெற விரும்பினேன். ஆனால் அவ்விஷயமும் உனக்கு ஒருவர் மூலம் தெரிந்து விட்டது ஆச்சரியம்தான்."

"இல்லை, என்னிடம் ஒருவரும் கூறவில்லை. சேவைக்குச் சிறந்த உதாரணமான உங்கள் குணம் எனக்கு இவ்வளவு நாட்கள் பழகியும் தெரியாமலிருக்குமா! என் யூகம் சரியாகி விட்டது..."

"மனத்தைத் தேற்றிக் கொள், ஊர்மிளா. அண்ணன் சேவை எனக்கு முக்கியம். அதில்

எனக்கு எல்லையற்ற ஆனந்தம். என் ஆனந்தத்தில் நீ குறுக்கிட மாட்டாய் என்று நம்புகிறேன். சஞ்சலப் படாதே..."

ஊர்மிளை சிரித்தாள். "பயப்படாதீர்கள். நான் உங்கள் விருப்பத்துக்கு இடையூறு விளைவிக்க மாட்டேன். உங்கள் அன்பை என் ஒருத்தியினுடைய உடைமையாக்கிக்கொள்ளும் சுயநலம் எனக்கில்லை. உங்கள் தமையன் பிழைத்திருந்தால் உலகமே பிழைத்திருக்கும். அப்படிப்பட்ட ஒருவருக்குத் தன் சர்வத்தையும் தியாகம் செய்து சேவை செய்யும் பாக்கியம் உங்களுக்குக் கிடைத்திருப்பது அதிர்ஷ்டமே. உங்கள் அதிர்ஷ்டத்தைத் தடுக்க எனக்கு உரிமையில்லை" என்றாள்.

லட்சுமணர் வாயடைத்து நின்றுவிட்டார். ஊர்மிளைக்கு இவ்வளவு பண்பட்ட மனமா! "ஊர்மிளை! மன்னியை அழைத்துப் போவது போல் உன்னையும் அழைத்துப் போகவில்லையே என்று வருத்தப்படாதே...."

சீதையைப் போல் ஊர்மிளை இங்கு பதட்டப்படவில்லை. "இல்லை, நான் தங்களைப் பின்பற்ற இயலாத நிலையில் இருப்பது எனக்குத் தெரியும். தமையனுக்குச் 'சேவகன்' நீங்கள். அச்சேவகனுக்குச் சேவகியாக நான் வந்தால் சேவகனுடைய மகிமை விளங்காது. மேலும் என்னால் குடிசை கட்ட முடியுமா! அவர் காலில் முள் தைத்து ரத்தம் வந்தால் அதைத் துடைக்க முடியுமா!..."

"ஊர்மிளை! உன்னை அடைந்ததில் நான் மகா பாக்கியவானாகி விட்டேன்."

ஊர்மிளை வெட்கத்தால் தலை குனிந்தாள். "உங்கள் புகழ் வார்த்தை எனக்கு இன்பத்தை அளிக்கிறது. தங்களுடன் நான் வராமலிருப்பதற்கு மற்றொரு காரணமும் இருக்கிறது. புத்திர சோகம் நீங்கள் அறிய மாட்டீர்கள். உங்கள் தாய் உங்களுக்கு விடை கொடுத்து விட்ட போதிலும், நீங்கள் சென்றதும் அவர் அடையப் போகும் துன்பம் எல்லையற்றது. அத் துன்பத்தைப் போக்கும் பெரும் பணியில் ஈடுபட நான் முயற்சி செய்ய வேண்டும்." லக்ஷ்மணர் ஸ்தம்பித்து நின்று விட்டார். இப்படிப்பட்ட பெண்ணைப் பிரிய வேண்டிய துக்கம் ஒரு புறமும், அவள் கூறிய மொழிகளில் ஆறுதல் ஒரு புறமும் அடைந்தார்.

விடைபெறும் நேரத்தில் ஒரு தட்டில் பழம் கிழங்கு வகைகளைக் கொண்டு வந்த ஊர்மிளை லக்ஷ்மணரை உண்ணச் செய்தாள். கீழே விரித்திருந்த தர்ப்பைப் பாயில் அவரைச் சற்று இளைப்பாறச் சொன்னாள். பிறகு மிகுதி இருந்த பழத்தைத் தன் வாயில் போட்டுக் கொண்ட அவள், "இனி நீங்கள் திரும்பும் வரை இப் பழங்களே என் ஆகாரம்; இத் தர்ப்பையே என் படுக்கை; இதோ, இச் சாதாரண துணிகளே என் ஆடை" என்று கூறிவிட்டு, எல்லா நகைகளையும் கழற்றி வைத்து விட்டாள். சாதாரண உடை உடுத்தி லக்ஷ்மணரின் முன்பு அவள் வந்து நின்றதும் தேஜோமய தபஸ்வினியைப் போல் அவள் காணப்பட்டாள். கண்களில் வந்த கண்ணீரைச் சிரமப்பட்டு அடக்கி லக்ஷ்மணர் சென்ற திக்கையே பார்த்துக் கொண்டு நின்று விட்டாள் ஊர்மிளை. பொங்கி வந்த கண்ணீரை அடக்குவதிலும் அவள் வெற்றி பெற்று விட்டாள்.

"ஊர்மிளை" என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தாள் சுமித்ரை. ஊர்மிளை எழுந்து வணங்கினாள்.

"என்னம்மா இது, நீ இன்னும் கிளம்ப வில்லையா!"—சுமித்ரை அதிசயத்துடன் வினவினாள். பரதனைப் பின்தொடர்ந்து அயோத்யா நகரம் முழுவதுமே காட்டுக்குச் சென்று ஸ்ரீ ராமனைத் திரும்பி அழைத்து வரப் புறப்பட்டு விட்டது. அருமை நாட்டுப் பெண்ணும் தன் கணவனைக் காணக் குதித்துக் கிளம்புவாள் என்று அவள் எண்ணியிருந்தாள்.

"எங்கேம்மா கிளம்ப வேண்டும்!"

"சாந்த குணம் அதிகமானால் மனிதர்கள் பொறுமையைக் கடைப் பிடித்துக் கடைப் பிடித்துப் பைத்தியமாகக் கூட ஆகி விடுகிறார்கள். உன் பொறுமையே உனக்கு யமனாக வந்து விடப் போகிறதே என்று எனக்குப் பயமாக இருக்கிறது. ஊர் முழுவதும் பரதனைப் பின்பற்றி வனத்துக்குச் சென்று ராமனை அழைத்துவரக் கிளம்பி விட்டது. நீ இன்னமும் கிளம்ப வில்லையே!"

ஊர்மிளை சற்று மௌனமாக இருந்தாள். சற்றுப் பொறுத்து, "அம்மா, நான் வர வில்லை" என்று கூறினாள்.

சுமித்ரை திடுக்கிட்டு விட்டாள். அத்துடன் கொஞ்சம் கோபமும் வந்தது. "நன்றாய் இருக்கிறது உன் தீர்மானம்! லக்ஷ்மணனை நீ பார்க்க வேண்டாமா! அவனைக் காண உனக்கு ஆவலில்லையா! அவன் மறைந்ததும் அவனிடமுள்ள அன்புகூடப் பட்டுப் போய் விட்டதா!" என்று நிதானம் தவறிப் படபடத்தாள் சுமித்ரை.

"அம்மா, மன்னிக்க வேண்டும். உங்கள் பிள்ளையைக் காட்டில் போய்ப் பார்த்தால்தான் பார்த்தது போலாகுமா! அவரை நான் தினமும் கண்டு கொண்டிருக்கிறேனே" என்று சாந்தமாகப் பதில் கூறினாள் ஊர்மிளை.

"அப்படியானால் அவன் ரூப தரிசனம் உனக்கு வேண்டாமா! அவனைத் திருப்பி அயோத்திக்கு அழைத்துவர விருப்பமில்லையா!"

"அவர் வருவதில் விருப்பமில்லை என்று யார் சொன்னது! ஒரு விஷயம், கௌசல்யா புத்திரர் திரும்பி வந்து விடுவார் என்பதை நீங்கள் நிச்சயமாக நம்புகிறீர்களா! அப்படி அவர் வந்து விட்டு இரு வாக்கிலும் தவறிவிட்ட தோஷத்தைச் சுமந்து கொள்வாரா! 'தந்தை கொடுத்த வாக்கை நிறைவேற்றுவேன்' என்றும், கைகேயித் தாயிடம் 'நீங்கள் எது சொன்னாலும் ஒப்புக்கொள்வேன்' என்றும் இரு வாக்குத் தத்தங்கள் கொடுத்து விட்டுப் பிறகு அதை மீறி நடக்கச் சம்மதப்படுவாரா!"

"அதெல்லாம் அங்கு போய் யோசிக்க வேண்டிய விஷயம்."

"உண்மைதான். ஆனால் அந்தத் தர்மாத்மா திரும்பி வர ஒப்பாவிடில் தங்கள் புத்திரரும் திரும்பி வரமாட்டார். ஒருகால் என்னைக் கண்டதும், தங்கள் புத்திரரின் மனம் மாறி, தமையனை விட்டு விட்டு நகரத்துக்குத் திரும்பி வர இசைந்து விட்டால், அவர் வாக்கு மீறும் பாபம் என்னைச் சேர்ந்து விடுமே ... அம்மா! இதை யெல்லாம் யோசித்து என் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு விட்டேன்."

சுமித்ரை மௌனமாகி விட்டாள். புத்திர பாசம் அவளைத் தியாகியாக்க முடியவில்லை.

வனம் சென்றதும் லக்ஷ்மணர் ஊர்மிளையைப் பற்றி ஒன்றுமே கேட்காதது சுமித்ரைக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியது. பொறுமையை இழந்து கடைசியில் அவளே "லக்ஷ்மணா! ஊர்மிளை சௌக்கியமாக இருக்கிறாள்" என்று கூறினாள்.

"உங்கள் பிரஸன்ன முகமே எனக்கு அவள் சௌக்கியத்தைக் காட்டி விட்டது. அவள் அசௌக்கியமாக இருந்தால் உங்கள் முகத்தில் கவலைக்குறி இருக்குமே! மாமியார் நாட்டுப் பெண் பிரிய பாவத்துக்கு நீங்கள் இருவரும் சிறந்த உதாரணமாயிற்றே!" என்றார் லக்ஷ்மணர் சிரித்துக் கொண்டே.

"நல்ல பேச்சாளன்தான் போ" என்றாள் சுமித்ரையும் சிரித்துக் கொண்டே.

"அவள் இங்கு வராததே நல்லதாயிற்று. வனத்தில் அண்ணன் சேவையில் இன்புற்று ஒரு சுற்றுப் பருத்திருக்கும் என்னைப் பார்த்து, அவள் மோகித்து, காட்டு வாசம்தான் சிறந்தது போலும் என்று இங்கேயே தங்கி விடுகிறேனே என்று ஆரம்பித்து விட்டால் நான் என்ன செய்வது! அவளைச் சமாதானப்படுத்த நான் காட்டுக்காவது ஓட வேண்டியிருக்கும். அல்லது அவளை இங்கு வைத்துக் கொண்டு, மன்னியும் அவளும் அடிக்கும் கொட்டத்தைச் சகித்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கும்" என்று கூறினார் லக்ஷ்மணர். ஸ்ரீ ராமன் சிரித்தார். அருகிலிருந்த சீதை வெட்கத்தால் தலை குனிந்தாள்.

அயோத்தியில் அன்று கோலாகல வைபவம். ஸ்ரீராமன் சீதை லக்ஷ்மணருடன் நாட்டுக்குள் அடி வைக்கும் நன்னாள். யாவரும் எதிர்கொண்டழைக்கச் சென்றுகொண்டிருந்தனர். எல்லோருக்கும் மத்தியில் ஊர்மிளையைக் காணாது, சுமித்ரை அவள்விடுதிக்குச் சென்றாள்.

துரும்பென இளைத்திருந்த உடம்புடன் ஊர்மிளை தர்ப்பைப் பாயில் உட்கார்ந்து மோன நிலையில் இருந்தாள்.

"ஊர்மிளை, எழுந்திரும்மா" என்றாள் சுமித்ரை கண் கலங்க.

ஊர்மிளை கண்களைத் திறக்கவில்லை. அவள் செவியில் சுமித்ரையின் சொற்கள் விழுந்ததாகவே தெரியவில்லை. அவள் சிறிதும் அசையாமல் சிலை போல் உட்கார்ந்திருப்பதைக் கண்டு சுமித்ரை பயந்து விட்டாள். ஊர்மிளை பழையபடி சகஜ நிலைக்கு வர உடனே லக்ஷ்மணரை அவளிடம் அழைத்து வர வேண்டும்.

லக்ஷ்மணர் வந்ததும் "ஊர்மிளை" என்று அவள் அருகில் சென்று கூப்பிட்டார். சட்டென விழித்துக்கொண்டாள் ஊர்மிளை. வெகு நாட்களாகக் கேட்க விரும்பிய அவ்வினிய குரல் அவளுக்கு அமிர்தத்தைப் போல இனிக்கக் காதில் விழுந்து, சஞ்சீவினி சக்தியைப் போல் புத்துயிர் ஊட்டியது. கண்களில் மீண்டும் பிரகாசம். எழுந்து ஓடி லக்ஷ்மணரை ஆலிங்கனம் செய்து கொண்டாள். கண்களில் நீர் பெருக்கெடுத்தது. லக்ஷ்மணரும் அவளை அணைத்து, அன்புடன் அவள் தலையை வருடினார். அவர் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகியது.

குடத்துள் விளக்குப்போல் பிரகாசித்த ஊர்மிளையின் புகழ், கவிகளின் வர்ணனைக்கும் அப்பாற்பட்டது என்பதினால் கவிகளும் அவளைப்பற்றி வர்ணிக்க வில்லையோ என்னவோ!

# வடமொழிச் சொற்கள் (தமிழில் பொருளுடன்)

தமிழ் யாப்பிலக்கணத்தில் எதுகையும் மோனையும், பாடலுக்கு மிக மிக அவசியம் என்று வற்புறுத்தப் பட்டிருக்கிறது. அப்படியே வடமொழிச் செய்யுள் இலக்கணத்தில் செய்யுள் அடிகளின் ஈற்றசைகள் ஒன்றாக ஒலிக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. இதற்குப் பிராஸம் என்று பெயர். அதாவது வடமொழிப் பாடலில் முதல் அடி 'தம்' என்ற ஓசையுடன் முடிந்தால் அடுத்த அடியும் 'தம்' என்றே முடிய வேண்டும். ஆகவே 'நவநீதம்' என்று முடித்தது என்று வைத்துக் கொள்ளுங்கள். அடுத்த அடி 'தம்' என்று முடிய என்ன வார்த்தை போடலாம் என்று இனி மண்டையைக் குழப்பிக் கொள்ள வேண்டியதில்லை. ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள் வெளியிட்டு வரும் வடமொழிச் சொற்கடலின் (அலைகள்) தரங்கங்கள் கைவசம் இருந்து விட்டால் போதும், ஸமுபேதம், விபரீதம், உபநீதம், ஸமவேதம் — ஆகிய இத்தனை சொற்கள் இருக்கின்றனவென்று தெரிந்து கொள்ளலாம்.

இப்படி ஸமஸ்கிருத மொழியில் செய்யுள் இயற்றும் அளவுக்குப் பாண்டித்தியம் பெற்றவர்களுக்கு மட்டுந்தான் இந்நூல் உபயோகப் படுமோ என்று எண்ண வேண்டியதில்லை. சாதாரண வடமொழி அகராதியாகவும் இந்நூல் உபயோகமாகும்படி ஒவ்வொரு நூலின் முடிவிலும் அதில் அவர் எடுத்துள்ள சொற்களை அகர வரிசையிலும் கொடுத்திருக்கிறார். ஒவ்வொரு சொல்லுக்கும் நேரான தமிழ் அர்த்தமும் கொடுத்திருப்பதால் வடமொழி யகராதியாகவே கொள்ளலாம்.

பக்திச் சுவை நனி சொட்டத் தீந்தமிழில் அருமையான கீர்த்தனங்கள் யாத்து, தமிழ்த் தெய்வத்துக்கு அரும் பணி புரிந்த ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள், வடமொழித் தெய்வத்துக்கும் இப்பொழுது அரும் பணியாற்றி வருகிறார்கள். "வடமொழிச் சொற்கடல்" என்ற இந்த நூலை பாகம் பாகமாகவும் அலை அலையாகவும் பிரித்துச் சிறு சிறு நூல்களாக யாரும் வாங்கக் கூடிய எளிய விலையில் வெளியிட்டு வருகிறார்கள். இதுவரையில் ஏழு புத்தகங்கள் வெளியாயுள்ளன. ஒவ்வொரு புத்தகத்தின் விலை: ரூ. 1—8—0.

ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள் தமது வாழ்க்கை லட்சியங்களில் ஒன்றாகக் கருதி இத் தொகுப்பை வெளியிட்டு வருகிறார்கள். தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் ஈடுபாடுள்ளவர்கள் அனைவரும் இந்நூல்களை வாங்கிப் பயன் அடைவார்கள் என்று கருதுகிறோம். கிடைக்கும் இடங்கள்: ஸ்ரீபாபநாசம் சிவன், மயிலாப்பூர், சென்னை; ஹோமியோபதி பிரஸ், கும்பகோணம்.

தேவியின் கூடகம்

# குழந்தைகளை வளர்ப்பது எப்படி?

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சகோதரி சுஜாதா,

குழந்தைகளை நல்ல முறையில் எப்படி வளர்ப்பது? இந்தக் காலத்துப் பெண்கள் குழந்தை பிறந்தவுடன் வளர்க்கத் தெரியாமல் தவிக்கிறார்களே யெனக் கேட்டிருக்கிறாய்.

நீ சொல்வதில் ஓரளவு உண்மையிருக்கிறது. படித்துப் பட்டம் பெற்ற சில பெண்கள் குழந்தையை வளர்க்கத் தெரியாமல் தவிக்கிறதையும் இன்னும் சில பெண்கள் நன்றாக வளர்த்து வருவதையும் பார்த்திருக்கிறேன்.

ஒரு குழந்தையை நன்றாக வளர்க்க, தாய்க்குத் தேவையானது அளவற்ற பொறுமைதான். என் வீட்டுக்கருகில் ஒரு சின்னப் பெண் முதல் குழந்தையுடன் குடும்பம் நடத்த வந்திருந்தாள். ஒரு நாள் நான் அவர்கள் வீட்டுக்குப் போயிருக்கும் பொழுது குழந்தை கையில் நிற்காமல் அழுது கொண்டிருந்தது. அந்தப் பெண்ணும் செய்வதறியாமல் தானும் அழுது கொண்டிருந்தாள். குழந்தையைக் கையில் வாங்கிப் பார்த்தேன். இடுப்பில் அழகுக்காக மணிகள் கோத்துக் கட்டியிருக்கிறாள். குழந்தை வளர்ந்து மணிகள் இடுப்பை இறுக்கிப் புண்ணாக்கியிருக்கின்றன. வலி தாங்காமல் குழந்தை அழுதிருக்கிறது. அதை நீக்கிவிட்டு மருந்து போட்டதும் குழந்தை நிம்மதியாகத் தூங்கியது. அந்தப் பெண் நல்ல புத்திசாலிதான். படித்தவள். ஆனால் அனுபவம் ஒவ்வொன்றுக்கும் தேவை. சில சமயம் காதில் எறும்பு புகுந்து கொண்டு அந்தவலி தாங்காமல் குழந்தை அழும். குழந்தைகளுக்கு எதைச் சொல்ல வேண்டுமானாலும் அழுகைதான். அதற்கு இயற்கை அறிவு அதிகம். தனக்கு வேண்டாததை உடனே தெரிவித்து விடும். எழுந்து விளையாடி விஷமம் செய்யும் பருவம் இன்னும் கஷ்டமான நிலை. அந்த வயதில் அவர்களுக்கு ஒவ்வொன்றையும் ஆராயும் மனப்பான்மை அதிகம். எரியும் அடுப்பு, ஸ்டௌவ், கத்தி இவைகளெல்லாம் குழந்தையின் கைக்கு எட்டாமல் வைக்க வேண்டும். சில இளம் பெண்கள் குழந்தைகள் அழுதால் செய்வதென்னவென்று அறியாமல் செய்து விடுகிறார்கள். ஒரு பெண், குழந்தை அழுவதைக் கண்டு அவசரமாகக் கொதிக்கும் பாலைப் புகட்டி ஆபத்தாகி விட்டது.



என்னுடைய சிநேகிதி சுமதியை நீ அறிவாயல்லவா? அவள் பேசும் போது கையை ஆட்டி முகத்தை வலித்துக் கொண்டு தான் பேசுவாள். அவளுடைய நான்கு வயதுப் பெண் ஒரு நாள் விளையாடிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். அது மற்றக் குழந்தைகளிடம் நான் அம்மாவாக இருக்கிறேனென்று சொல்லிக் கொண்டு சுமதியைப் போலவே கையை ஆட்டி முகத்தை வலித்துப் பேசியது. நல்ல பழக்க வழக்கங்களோ கெட்ட பழக்கங்களோ அவர்கள் இளம் மனத்தில் உறுதியாகப் பதிந்து விடுகின்றன.

சுபாஷிணி வீட்டுக்குக் குழந்தை பிறந்த நாளைக்குப் போயிருந்தேன். சுபாஷிணியின் பெரிய பெண் நளினி படு சுட்டி. அதற்கு ஐந்து வயதுதான். பர்வதம் மாமி வந்து கொண்டிருந்தாள். 'கோவில் யானை மாமி வருகிறார்' என்று அந்தக் குழந்தை கத்தியது. பர்வதம் பருமனாக இருப்பதற்காக வீட்டில் குழந்தையின் எதிரில் தாய் இப்படிச் சொல்லி இருக்க வேண்டும். கள்ளம் கபட மற்ற அந்தக் குழந்தை அதைக் கத்திச் சொல்லி விட்டது; அது விபரீதமாகி விட்டது.

குழந்தைகளிடம் அன்பைச் சொரிந்து அன்பைப் பெற வேண்டியவள் தாய். மேல் நாடுகளில் குழந்தைகளுக்கு அதிகக் கௌரவம் கொடுக்கிறார்கள்; வருங்காலச் செல்வம், வளரும் நிதி, எதிர்கால தேச மக்கள் என்றெல்லாம் குழந்தைகளைக் கருதுகிறார்கள். அவர்கள் பருவத்திற்கேற்ப இலக்கியங்கள், விழாக்கள், விளையாட்டுப் பந்தயங்கள், பரிசுகள் எல்லாம் வைக்கிறார்கள். அற்ப விஷயத்தில் கூடப் பொறுப்புணர்ச்சியுடன்வாழுகிறார்கள். அந் நாட்டில் நான்கு குழந்தைகளைப் பெற்று நன்றாக வளர்த்திடும் தாய்க்கு டாக்டர் பட்டம் அளித்திருக்கிறார்கள். நம் நாட்டில் குழந்தைகளைக் கௌரவிப்பது குறைவுதான். வயது சென்றவர்களை மிகவும் மதிக்கின்றோம். அது விரும்பத்தக்கதுதான். ஆனால் குழந்தைகளை அலட்சியம் செய்ய வேண்டிய அவசியமில்லையே.

இன்று குழந்தைகளுக்காகச் சில பேசும் படங்கள், இலக்கியம் இவை மிகக் குறைந்த அளவில் இருந்தாலும் அந்த முயற்சிகள் பெருக வேண்டும். சுஜாதா! இவைகளையெல்லாம் நீ ஏற்றுக் கொள்வா யெனக் கருதுகிறேன்.

—பூமாதேவி




# கண்ணின் மணிகள்

காந்தன்

சூழ்நிலையின் விபரீதத்தினால், சந்தர்ப்பத்தின் சதியினால் பெண்மைக்குக் களங்கம் கற்பிக்கப்பட்ட போதெல்லாம், அவ்வபலைகள் அந்தக் கறையைக் களைந்து தங்கள் மாசற்ற தன்மையை நிரூபிக்க, நினைத்தாலே நடுக்கம் ஏற்படும் தீவிரமான சோதனைகளை மேற்கொள்ள வேண்டி வந்தது.

பெண்ணின் பெருமையை நிலைநாட்ட, பெண்மையின் உண்மையை நிரூபிக்க முயன்றவர்களெல்லாம் நம் பாரத நாட்டில் தீயின் உதவியைத்தான் நாடியிருக்கின்றனர். தன் களங்கமற்ற தன்மையை நிரூபிக்க, ஸ்ரீராமன் பத்தினியான சீதாதேவியே தீக்குளிக்க நேர்ந்தது என்பதே இதற்குத் தக்க சான்று. அத்தகைய தியாகத்தின் மூலம்தான் பாரதத்தின் பெண்ணினம் மற்றைய நாடுகளுக்கு வழி காட்டும் கலங்கரை விளக்காக இன்னும் பிரகாசிக்கிறது.

கன்னிப் பருவத்தில் கணவனின் கரம் பிடித்து, அவன் காரியங்களிலெல்லாம் கை கொடுத்து, புவியின் பெண்ணறம் வழுவாமல் காக்கும் புனிதத்தன்மை வாய்ந்த பெண்ணினம் அத்தனைக் கொடுமைக்கு ஆளாவதற்குக் காரணம், ஆண்களின் உள்ளத்தில் எழும் சந்தேகப் பேய்தான் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

ரகு குல திலகமான ராகவன் காலத்துக்கு முன்பே தோன்றி விட்ட அந்தச் சந்தேகப் பேய், இன்னும் வாழையடி வாழையாக வாழ்ந்து, வளர்ந்து கொண்டே வருகிறது.

மேற்படி சந்தேகப் பேயின் ஆதிக்கத்தை ஆதாரமாகக் கொண்ட சிறுகதைகளும், பெருங் கதைகளும், திரைக் கதைகளும் அடிக்கடி தோன்றி மக்கட் குலம் சந்தேகப் பேயை மறந்து விடாமலிருக்கப் பெரிதும் துணை புரிந்து வந்திருக்கின்றன !

" கண்ணின் மணிகள் " கதையும் அவற்றின் இனக்கதைதான்.

போலீஸ் சூப்பரிண்டெண்டெண்ட் ராதாகிருஷ்ணனின் ஆரம்ப சந்தேகம் தன் முகத்திலிருக்கும் கறுப்பு மச்சத்தைக் கருத்தில் வையாமல் தன்னை எவன் மணந்து கொள்ளப் போகிறான் என்பதுதான். அடுத்த சந்தேகம், அவனைக் மனம் விரும்பி மணந்த ஏழைப் பெண் ராஜம், தன் குழந்தைக்கு வைத்தியம் செய்ய வந்த டாக்டர் சுந்தரின் இளமையிலும் அழகிலும் ஈடுபட்டுவிட்டதாக நினைத்ததுதான். ராஜம் தீக் குளித்ததும், ராதாகிருஷ்ணனின் குடும்பம் பாழாகிறது. டாக்டர் சுந்தரும் மன வேதனை தாளாமல், தீப்புண், காயங்களுடன் கண்களை இழந்து விடுகிறான். ராதாகிருஷ்ணன் வாழ்வில் மீண்டும் ஒளி பரவுகிறது. பத்மினி என்ற கண்ணிழந்த அநாதைப் பெண்ணை அன்போடு வளர்க்கிறான். ரண சிகிச்சை மூலம் அவள் கண் பார்வை பெற்றுக் காதலன் ராஜாவைத் தேடுகிறாள். அவள் காதலன் கண்ணிழந்த ராஜாதான் டாக்டர் சுந்தர் என்று அறிந்த ராதாகிருஷ்ணன் திடுக்கிடுகிறான்.

கதையின் முடிவை வெள்ளித்திரையில் காண்க என்று சம்பிரதாயமாகப் போடுவது இக் கதைக்கு உண்மையாகவே பொருந்துகிறது. ராதாகிருஷ்ணன் தன் உயிரை மாய்த்துக் கொண்டு, தன் கண்ணின் மணிகளைக் கொண்டு சுந்தருக்குப் பார்வை அளிக்கும்படி எழுதி வைத்திருப்பது நல்ல முடிவுதான்.

இந்தப் படத்தில் ஒரு சௌகரியம்; எம். கே. ராதா ராதாகிருஷ்ணனாகவும், சுந்தர் டாக்டர் சுந்தராகவும், எம். வி. ராஜம்மா ராஜமாகவும், பத்மினி பத்மினியாகவும், என். எஸ்.

கிருஷ்ணன் கிருஷ்ணனாக வும், மதுரம் மதுரமாக வும், முத்துலக்ஷ்மி முத்து வாகவும் நடித்துள்ளனர்.



இந்தப் படத்தின் கண்ணாக விளங்குபவர் பத்மினிதான். கண்களை இழந்து ஏழையாக வாழ்ந்த போதும், கண்களைப் பெற்றுப் பணக்கார வாழ்வில் இணைந்த போதும், ராஜாவிடம் அன்பு மொழி பேசிய போதும், ராஜாவைப் பிரிந்து ஏங்கிய போதும் பத்மினியின் நடிப்பு பாராட்டும் முறையில் விளங்கியது. கண்ணிழந்த கபோதியாக அவதியுற்ற போது பத்மினியின் கண்கள் பார்வையற்ற தோற்றத்தை அளித்தன. கண் பார்வை மீண்டதும் அவர் பார்வையின் ஒளியும் மீண்டு விடுகிறது. இது படம் பார்ப்பவரின் பார்வையைச் சுலபமாகக் கவர்ந்து விடுகிறது. இந்த இரண்டு தோற்றங்களிலும் பத்மினி இயல்பாகவே நடித்து வெற்றி பெற்றிருக்கிறார். ஒரு கபோதிக்குக் கண் பார்வை வந்தால் அவள் உள்ளம் எத்தகைய களிப்படையும் என்பதை அவர் நடிப்பில் யாரும் எளிதில் உணர்ந்து கொள்ள முடிகிறது.

டாக்டர் சுந்தராக நடிக்கும் சுந்தர் திரை உலகத்துக்குப் புதியவர். முயன்று நடிப்பாரானால் முன்னுக்கு வரலாம். அவரது நடிப்பில், விரைவில் முன்னணிக்கு வரக்கூடிய அம்சங்கள் நிறையக் காண முடிகின்றன.

என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் இவர்களின் நடிப்பு இப்படத்திலும் எல்லாப் படங்களிலும் போல் நன்றாயிருக்கிறது.

எம். கே. ராதா நாடக மேடையிலிருந்து புகழ் பெற்ற நல்ல நடிகர்; எந்தப் பாத்திரத்தையும் ஏற்று இயல்பாக நடித்து, பாத்திரத்துக்கும் தமக்கும் நல்ல பெயர் சம்பாதித்து விடுவார். இந்தப் படத்திலும் அவர் நடிப்பு சிறந்து விளங்குகிறது. இந்தப் படத்தில், அவர் சதா வேதனைப் படும் பாத்திரத்தை ஏற்று வெற்றி பெற்று விட்டார். உணர்ச்சியும் உருக்கமும் நிறைந்த அத்தகைய பாத்திரத்தை ஏற்று நல்ல பெயரைச் சுலபமாகப் பெற்று விட்டார்.

"நல்ல வீணை இதே" என்ற பாட்டு படத்தில் இரண்டு மூன்று காட்சிகளில் பாடப்படுகிறது. பின்னணியில் எம். எல். வசந்தகுமாரி குரல் கொடுத்திருக்கிறார். பாட்டு கதையோடு பின்னிப் பிணைந்து கொண்டு கதைக்கு நல்ல மெருகு கொடுக்கிறது.

திரைக்கதை வசனம் தெளிவாகவும் நன்றாகவும் அமைந்திருக்கிறது.

"கண்ணின் மணிகள்" கதை நல்ல கதை; கருத்துப் பொதிந்த கதை; உணர்ச்சி நிறைந்த கதை. அந்தக் கதையை நல்ல முறையில் படமாக்க முயன்று ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கும் மகேஸ்வரி பிக்சர்ஸார் படத்தின் சுவாரஸ்யம் குன்றும் வகையில் பல நடன மணிகளை ஏககாலத்தில் நடனம் ஆடச் செய்து பழி வாங்கியிருக்க வேண்டாம். ஒரு வேளை படத்தில் திருஷ்டி பரிகாரமாக ஏதாவது சில அம்சங்கள் இருக்க வேண்டும் என்பதற்காக மேற்படி நடனத்தைப் புகுத்தி யிருக்கிறார்கள் போலும்!

ஆரம்பத்திலிருந்தே துயரமும் வேதனையும் சுருதி கூட்டி இழைந்து வரும் இந்தப் படம், கடைசியில் உணர்ச்சி ததும்பும் முடிவைக் கொண்டிருப்பதால் யாருமே ரசிப்பார்கள் என்பதில் ஐயமில்லை.







# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

27

வழிபாட்டின் சாரமும் உயிரும் பிரார்த்தனை. வழிபாடு இல்லாமல் மனிதன் பிழைத்திருக்க முடியாது. ஆகவே பிரார்த்தனை மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது. சிலர் தங்களுடைய பகுத்தறிவை மெச்சித் தமக்கு சமய வழிபாடு வேண்டியது இல்லை என்றே சொல்லுவார்கள். இது எப்படி இருக்கிறது என்றால், எனக்கு மூச்சு இருக்கிறது. ஆனால் மூக்கு இல்லை என்று சொல்லுவது போல் ஆகும். பகுத்தறிவைக் கொண்டோ, இயற்கை உணர்வைக் கொண்டோ, அல்லது மூடபக்தியினாலோ ஏதோ ஒரு விதத்தில் பராசக்தியின் தொடர்பைமனிதன் ஒப்புக்கொண்டே தீருகிறான். தீவிர நாஸ்திகனும், கடவுட் தத்துவம் அறிவுக்கு எட்டாதது என்று வாதிப்பவனும் யாருமே நன்னெறி வேண்டும் என்றே சொல்லுகிறார்கள். நன்னெறியில் நடப்பது நல்லது என்றும், தவறுவது தீது என்றும் சொல்லித்தான் வருகிறார்கள். ப்ராட்லா என்பவர்—அவருடைய நாஸ்திகம் உலகம் அறிந்தது—தான் உண்மை என்று கொண்டதை மறைத்துவைக்க இயலாது, பகிரங்கமாகப் பறைசாற்றி வரவேண்டும் என்று வற்புறுத்தி வந்தார். இதற்காகப் பல தொந்தரவுகளும் பொறுத்தார். அதிலேயே அவருக்கு மகிழ்ச்சி. சத்தியமே முறையும் பயனும் என்பார். சத்திய மார்க்கத்தில் சந்தோஷத்தைக் கண்டார். கஷ்டங்களுக்கு இடையில் இந்தச் சந்தோஷம் அவருக்கு எங்கிருந்து உண்டாயிற்று? பராசக்தியின் தொடர்பினால் தான் என்பேன். இதனாலேதான் நான் சமயமே வேண்டாம் என்பவனும் கூட ஏதோ ஒருவித வழிபாட்டை ஒப்புக் கொண்டுதான் வாழ்கிறான் என்பேன்.

இப்போது பிரார்த்தனையைப் பற்றிப் பேசுவோம். பிரார்த்தனை என்றால் வேண்டுதல் அல்லது தியானம். ஒன்று வேண்டும் என்று இறைஞ்சுதலும் பிரார்த்தனையே. உள்ளத் தியானத்தில் நிறுத்துதலும் பிரார்த்தனையே. முடிவில் இரண்டும் ஒன்றேயாகும். இறைஞ்சுதலாயினும் உள்ளத்தை மாசு நீக்கிச் சுத்தப் படுத்துதலையே வேண்டுதல் செய்ய வேண்டும். மேலே மூடிக் கிடக்கும் அறியாமையும் இருளும் அகலவேண்டும் என்று பிரார்த்தனை செய்யவேண்டும். தனக்குள்ளே இருக்கிற தெய்வப் பண்பை எழுப்பி அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப் படுபவன் இறைஞ்சித்தான் தீர வேண்டும். ஆனால் பிரார்த்தனை என்பது வெறும் மந்திர உச்சாரணமோ ஜபமோ செய்வது அல்லது செய்வதைக் கேட்பது அல்ல. ராமநாமத்தை ஆயிரந்தடவை செய்தாலும் உள்ளம் கரையாமல் செய்தால் பயனில்லை. பிரார்த்தனைச் சமயத்தில் ஒருவன் வாய் திறவாமல் உள்ளத்தினால் அதில் கலந்து கொள்ளலாம். ஒருவன் வாய்க்குள் உச்சரித்துக் கொண்டே உள்ளம் சேராமல் இருக்கலாம். பேச்சின்றிப் பிரார்த்தனையில் கலந்து கொண்டவன் மேலானவன். வாயில் சொல்லும் மந்திரமோ வாக்கியமோ உள்ளத்தினின்று எழுந்த ஆர்வத்தோடு ஒட்டியிருக்க வேண்டும். பசியடைந்தவன் இலை முன் உட்கார்ந்து எப்படி உணவை அனுபவிக்கிறானோ, அவ்விதம் பசி கொண்ட உள்ளம் பிரார்த்தனையினால் மகிழ்ச்சி காண்கிறது.

என்னுடைய அநுபவத்தைச் சொல்லுகிறேன். என்னுடைய சகாக்களின் அநுபவத்தையும் சொல்லுகிறேன். பிரார்த்தனையின் அற்புத ஆனந்தத்தைக் கண்டவர் பல நாள் உணவு இல்லாமல் இருக்க முடியும். ஒரு கணமும் பிரார்த்தனை இல்லாமல் மட்டும் இருக்க முடியாது. பிரார்த்தனை இன்றி உள்ளத்தில் குழப்பம் அடங்கி அமைதி நிலவாது.

அப்படியாயின் எந்த ஒரு நிமிஷமும் இடைவிடாமல் பிரார்த்தனை செலுத்திக்கொண்டே இருக்க வேண்டுமோ

என்று சிலர் கேட்பார்கள். உண்மைதான். ஆனால் ஒரு க்ஷண நேரம் முற்றிலும் ஒடுங்கி தியானம் செய்வதே நமக்குக் கஷ்டமாக இருக்கிறதே: நாம் எப்படி எந்நேரமும் தியானத்தில் மூழ்க முடியும்? இதனாலேதான் ஒரு நேரம் குறிப்பிட்டு ஓரளவு காலம் பாசமும் பற்றும் நீக்கிக் கொண்டு தியானிக்க யத்தனம் செய்கிறோம். இந்தத் தேகத்தை விட்டுக் கொஞ்ச நேரமாவது உயிரைத் தனியே நிறுத்தப் பார்க்கிறோம். சூரதாசரின் பாடல் கேட்டிருப்பீர்களே. ஈசனோடு கலந்து போகவேண்டும் என்று புலம்புகிறார். நாம் அவரை ஒரு புனித பக்தராகப் பாவிக்கிறோம். அவருடைய கணக்கில் தன்னைத்தான் ஒரு பெரும் பாவியாகக் கருதுகிறார். நம்மைவிட வெகு தூரம் மேல் சென்று விட்ட அவர் ஈசனை நோக்கி 'நீ எவ்வளவோ தூரத்தில் இருக்கிறாயே?' என்று புலம்புகிறார். அந்தத் தொலைவின் அளவு மிகப் பெருந் துன்பம் தருகிறது. அதனால் தன்னைத்தான் இகழ்ந்தும் வெறுத்தும் புலம்புகிறார். "என்னைப் போன்ற ஒரு கொடியவன், மோசக்காரன், காமுகன் யார் உண்டு?" என்கிறார்.

மோனை கௌத குடில கல காசி

# படித்துப் பாருங்கள்

## நேரனர் தமிழ்க் கையகராதி

தமிழ் அறிவைப் பெறுவதற்கு இன்றியமையாத துணையாக விளங்குவது அகராதி. தமிழ்ச் சொற்களின் சரியான பொருளை உணர்ந்து அவற்றைச் சரியான முறையில் உபயோகிக்கவும் ஆற்றல் தருவது அகராதியே. பெரியதும் சிறியதுமாக இதுவரையில் எத்தனையோ அகராதிகள் வெளிவந்திருக்கின்றன. இந்தக் கையடக்கமான பதிப்பு மிகச் சீரிய முறையில் தயாரிக்கப்பட்டு, நல்ல தாளில் பிரசுரிக்கப்பட்டு நன்றாக இருக்கிறது. வித்துவான் உயர்திருவாளர் ஐயம்பெருமாள் கோனார் தொகுத்தது என்பதே இந்நூலின் சிறப்புக்குத் தக்க சான்று. தமிழ் கற்கும் மாணவருக்கு மட்டுமின்றித் தமிழர் எல்லாருக்குமே பயன்படக்கூடிய ஓர் சிறந்த பொக்கிஷம் இது.

பிரசுரம்: பழனியப்பா பிரதர்ஸ், சேப்பாக்கம், சென்னை—5; விலை: ரூ. 3—0—0.

## குழலோசை (கதைகள்)

ஒரு நீண்ட கதையைப் படிப்பதற்கும் ஒரு சிறுகதைத் தொகுதியைப் படிப்பதற்கும் வித்தியாசம் நிறைய இருக்கிறது. சிறுகதைத் தொகுதியின் தன்மை தனித் தனியாக ஒவ்வொரு கதையையும், விட்டு விட்டுப் படிக்கலாம். ஒவ்வொரு கதையின் ருசியையும் ஆர அமர இருந்து சுவைக்கலாம். ஆகவே, இத்தாளில் நாவல்களை வெளியிட்டு வரும் பிரசுரகர்த்தர்கள் சிறுகதைத் தொகுதிகள் வெளியிடுவதும் நல்ல சேவையே யாகும்.

இத் தொகுதியில் சேர்க்கப்பட்டிருக்கும் ஏழு சிறுகதைகளும், ஏழு ஸ்வரங்களைப் போல் வெவ்வேறு போக்கில் அமைந்து சுவையூட்டுகின்றன. வாசகர்களைப் படிக்கத் தூண்டும் நல்ல விறுவிறுப்பான நடையைக் கையாளுகிறார் ஆசிரியர். இத் தொகுதியில் வெளியாகியிருக்கும் எல்லாக் கதைகளும் ஏற்கனவே பத்திரிகையில் வெளியானவை. ஆயினும் அவற்றை மீண்டும் படிக்கும்போது சிறிதும் அலுப்புத் தோன்றவில்லை. நல்ல கதைகளுக்கு அதுதானே சான்று!

எழுதியவர்: வேம்பு (விக்கிரமன்); பிரசுரம்: அமுதசுரபி பதிப்பகம், 20, கந்தசாமி செட்டித் தெரு, சென்னை—1: விலை ரூ. 1—4—0.

## 1. ரத்னமாளிகை ரகசியம்

## 2. மலர்விழி மங்கை

ரத்னமாளிகை மரங்கள் அடர்ந்த ஏகாந்தமான இடத்தில் இருந்தது. அந்த மாளிகையில் காந்தாமணி தனியே யிருந்தாள். அங்கு ஒரு மர்மக் கொலை நடந்து விட்டது. கொலை செய்யப்பட்டவனையும் கொலை செய்தவனையும் கண்டு பிடிக்க அம்மாளிகையின் சொந்தக்காரியான பானுமதியும், னளினியும், ஆத்மநாதனும், காந்தாமணியும் பெரு முயற்சி செய்கின்றனர். ஆம், அறிய முடிந்ததா! கொலைகாரன் எங்கே! கொலையுண்டவன் யார்! அவனை ஏன் கொலை செய்தான்!—எல்லாம் மர்மச் சுழலில் சிக்கிக் கடைசியில் விளங்குகின்றன. அவற்றை இங்கே விளக்கிவிட்டால் புத்தகம் படிக்க வேண்டிய அவசியம் இல்லாமற் போய் விடும். விறுவிறு என்று கீரோட்டம் போல் செல்லும் "ரத்னமாளிகை"யின் விலை: ரூ. 1-12-0.

"மலர்விழி மங்கை" என்னும் கதையில், ஒரு பகல் கொள்ளைக்காரன் பணக்காரனைப் போல் வேஷம்போட்டு எல்லாரையும் ஏமாற்றுகிறான். ஒரு பணக்காரக் குடும்பப் பெண், குடும்பத்தின் பயங்கர நெருக்கடி காரணமாகக் கொலைகாரியைப்போல் நடமாடுகிறாள். பணத்தாசையினாலும் அந்தஸ்து மோகத்தினாலும் எதையும் செய்யக்கூடிய பெண்களும் இவ்வுலகில் இருக்கிறார்கள். இந் நூலின் கதாநாயகி அந்த ரகத்தைச் சேர்ந்தவள். ஒரே மூச்சில் படித்து முடிக்கத் தூண்டும் இந்தத் துப்பறியும் கதையில் சிக்கலுக்குப் பஞ்சமில்லை. விலை: ரூ. 1—12—0.

இரண்டு நூல்களையும் எழுதியவர்: ஆர். எஸ். மணி; பிரசுரம்: மின்னொளிப் பதிப்பகம், கிரிகோரி தெரு, சென்னை — 1. — விஜயம்

நீங்கள் இதுவரை அருந்தாத

# மிகச்சிறந்த காப்பி...

...ஆயினும் மிகவும் நயமான விலையில்!







ஸ்டேன்ஸ் சிகப்பு லேபின் சுத்தமான காப்பி உங்களுக்கேற்ற சிறந்த நறுமணமுள்ள பலமான பானத்தை அளிப்பதோடு, அதிக டம்ளர்கள் காப்பியையும் அளிக்கிறது.

நீங்கள் காப்பி வாங்கும்பொழுது ஸ்டேன்ஸ் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள். இது உங்களுக்கு உயர்ந்த ரகத்திற்கு உத்திரவாதம், இதனுடைய நறுமணம் சிறிதும் குன்றாமல். காற்றுப் புகாத ½, 1, 3, 7, 14 & 20 ராத்தல் டின்களில் பாக் செய்யப்படுகின்றன. இன்றே ஒரு டின் வாங்குங்கள்.

தி யுனைடெட் காப்பி சப்ளை
கம்பெனி லிட்.
கோயம்புத்தூர், தென் இந்தியா




**Stanes**

ஸ்டேன்ஸ் சிகப்பு லேபின்
சுத்தமான காப்பி
எல்லோரும் வாங்கக்கூடிய
நல்ல காப்பி

STC 4057

வேலூருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்:
ஸ்ரீ ஜி. எஸ். அனந்தராமன், 30, கமிஸரி பஜார், வேலூர்
காக்கிநாடா ஏஜண்டு:
ஸ்ரீ கர்ணம் ஹனுமந்த ராவ், ஈஸ்வர் நிவாஸ், திருமல் ராவ் தெரு, காந்திநகர்

மிருதுவான

மெல்லிய

குளிர்ச்சியான

ராஜரேகா
சலவை செய்தது 52"

ராஜலக்ஷ்மி
சலவை & பிரிண்ட் செய்தது 48"

ராஜசோபா
சலவை செய்தது 45"

ராஜசுந்தரி
சலவை & பிரிண்ட் செய்தது 36"



# TWO by TWO

# FULL VOILE




# தி மபத்லால் பைன்




ஸ்பின்னிங் & மானுபாக்சரிங் கம். லிட்.
நவ்ஸாரி.

Graphic A3 56 MG 6F

கல்கியின்

# அமரதாரா

அத்தியாயம் 17

## இடிந்த கோட்டை




நீதிபதி இந்துமதிக்கு மரண தண்டனை என்று கூறியதும் அப்படியே கல்லாய்ச் சமைந்து விட்டேன். ஆனால் இந்துவுக்கு என்று மரண தண்டனை என்று கூறினார்களோ அன்று முதல் அவள் சரியாகி விட்டாள். அது எனக்கு இன்னும் ஆச்சரியமாக இருக்கிறது. என்ன சாந்தம் வந்து விட்டது அவளுக்கு? எங்கிருந்து வந்தது என்றே புரியவில்லை. இந்துவின் அமைதி தவழும் முகத்தைப் பார்க்கும் போது எனக்குப் பொறுக்க முடியாத வேதனை ஏற்பட்டது. அவள் கோபித்துக் கொள்வதே தேவலை என்று தோன்றியது.

பிறகு, "இந்து! உனக்கு மரண தண்டனை நிறைவேற்றப் படுவதாக இருந்தாலும், அதற்கு முன்னால் உன்னை மணந்து கொள்கிறேன். நீ என் மனைவியாக ஒரு நாளாவது இருக்க வேண்டும்" என்று கூறி விட்டுக் கண்ணீர் விட்டேன். இந்துவின் மனம் அப்போது கரைந்து போயிற்று. உறைந்து போயிருந்த பனிக்கட்டி உருகி அன்பு வெள்ளமாகப் பாயத் தொடங்கியது. அந்த ஜீவ நதி எனக்கு உயிரளிக்கத் தொடங்கியது. நம்பிக்கைப் பயிர் அங்கே விளையத் தொடங்கியது. அதன் பிறகு இந்து என்னிடம் எதையும் மறைக்கவில்லை. தன்னுடைய இதயத்தைத் திறந்து என்னிடம் அன்பைப் பொழிந்தாள்.

இந்துவுக்கு மரண தண்டனை என்று தீர்ப்பான விஷயமும், நான் ஹைக்கோர்ட்டுக்கு அப்பீல் செய்திருக்கும் விஷயமும் தெரிந்த உடனே கலாவும் ரமேஷும் புறப்பட்டு வந்தார்கள். ரமேஷ் எவ்வளவு தடுத்தும் கலா கேட்கவில்லை. எனக்கு உதவி செய்ய வந்தாள். ஆனால் வரும் போதே காய்ச்சல் வந்து விட்டது. நிமோனியா என்று தெரிந்ததும் அவளை ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டார்கள். ஐந்து நாட்கள் நினைவே இல்லாமலிருந்தது. இப்போதும் காய்ச்சல் முற்றிலும் குணமாகவில்லை. பாவம்! இந்துவைப் பற்றி ரொம்பக் கவலைப்படுகிறாள். இந்துவிடம் நிராசை அடைந்துவிடவேண்டாமென்று கூறச் சொன்னாள்.

பாவம்! இந்துவும் தன் மன வேதனைகளையெல்லாம் என்னிடம் காட்டிக் கொள்வதே இல்லை.

நான் படும் துயரத்தைக் கண்டு இந்து மனம் உருகி எனக்கு உதவி செய்ய வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறாள். என்னுடைய கடமையை நான் நிறைவேற்றுவதில் அவளுக்குரிய பங்கைச் சரியாகச் செய்ய வேண்டியது தன்னுடைய கடமைதான் என்று

ஒப்புக் கொண்டாள். நான் சரியாக நடந்து கொள்ளாமல் என்னை வேதனைப் படுத்தியதற்காக மன்னிப்புக் கேட்டாள்.

இனிமேல் ஹைக்கோர்ட்டில் வழக்கு நடக்கப் போகிறது. இந்துவை எவ்வாறேனும் விடுதலை செய்து விடலாமென்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. என்ன நடக்கப் போகிறதோ? இறைவனுக்குத்தான் வெளிச்சம்.

இதுவரையில் நடந்ததையெல்லாம் எழுதி முடித்து விட்ட பிறகு எனக்கு இங்கே இருப்பது பைத்தியம் பிடித்து விடும் போலிருந்தது. தங்கபாண்டியனுக்கும் உடம்பு சரியாக இல்லை. இங்கே வெறும் அலைச்சல்தான் மிச்சம்.

எனது கதையை எழுதி முடித்த பிறகு இந்துவிடம் இதைக் கொடுத்து விட்டு அவள் எழுதியிருப்பதை வாங்கிப் படிக்க வேண்டுமென்று ஆசை உண்டாயிற்று. உடனே சென்னைக்குப் புறப்பட்டுச்சென்றேன். இருந்தாலும் இந்துவை ஜாமீனில் விட மறுக்கிறார்களே! அவள் சிறையில் இருப்பதை நினைக்கும் போதே என் நெஞ்சு கொதிக்கிறது.



இந்துவைப் போய்ப் பார்த்தேன். அவள் முகத்தில் அமைதி தவழ்கிறது. அவள் சிறிதும் சோர்வாக இல்லை.

அவளுடைய அறைக் கதவைத் திறந்ததும், "இந்து!" என்று கூப்பிட்டேன். அதற்கு மேல் பேச முடியவில்லை.

இந்து அருகில் வந்தாள். "நீங்கள் ஏன் இப்படிக் கலங்குகிறீர்கள்? எனக்கு மரணத்தைக் கண்டு சிறிதும் பயமில்லை. இந்த ஜன்மத்தில் இல்லாவிட்டாலும், அடுத்த ஜன்மத்தில் உங்களை என் பதியாக அடைவேன்" என்றாள். அவள் கண்களிலும் கண்ணீர் பொங்கியது.

நான் அதைத் துடைத்து விட்டு, "இந்து! நீ கேட்டபடி நான் என் கதையை ஒரு சிறு சம்பவம் கூட விட்டுப் போகாமல் எழுதி வந்திருக்கிறேன். நீயும் உன் கதையை எழுதி முடித்து விட்டாயல்லவா?" என்று கேட்டேன்.

இந்து ஒரு கத்தை காகிதங்களை எடுத்து என்னிடம் கொடுத்தாள். "என்னைப் போன்ற பாக்கியம் எந்தப் பெண்ணுக்கும் கிடைக்காது. என்னுடைய வாழ்க்கை முழுவதையும் அப்படியே உங்களுடன் பங்கிட்டுக்கொள்ள எனக்கு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. உங்கள் கதையைப் படிப்பதன் மூலம் அது பூரணத்துவம் அடைந்துவிடும். எனக்கு என்ன நேர்ந்தாலும் என்னுடைய அன்பை நீங்கள் மறக்க மாட்டீர்களே? அதில் சந்தேகப்பட மாட்டீர்களே?" என்று கேட்டாள். மறுபடியும் அவளுக்குக் கண்ணீர் பொங்கி வந்தது.

"இந்து! புன்னகையே தவழ வேண்டிய உன் பொன் முகத்தில், கண்ணீரே வழியும்படி நான் விட்டிருக்கிறேன். என்னை மன்னித்து விடு. இறைவன் அருளால் எல்லாம் சீக்கிரம் சரியாகி நீ என்னுடையவளாகி விடுவாய் என்று நம்புகிறேன். அப்போது பார், உன் கண்களில் ஒரு சொட்டு ஜலம் வர நான் அனுமதிக்கிறேனா என்று?" என்றேன்.

இந்து சட்டென்று குனிந்து என்னை நமஸ்கரித்தாள். "நீங்கள் இப்படிச் சொன்னதே எனக்குப் போதும். நான் செய்த தவறுகளை யெல்லாம் மன்னித்து விடுங்கள். உங்களை நான் அலட்சியம் செய்ததாக நடந்து கொண்டதெல்லாம் உங்கள் மீது எனக்கு ஏற்பட்ட வெறுப்பினால் அல்ல, அளவிலாத அன்பினால் தான் என்று என் கதையைப் படித்தால் தெரிந்துகொள்வீர்கள்" என்றாள்.

"இந்து! உனக்கு என் மீது உள்ள பிரேமைக்குச் சாட்சி எனக்கு வேண்டியதில்லை. சூரியன் பிரகாசிப்பதற்கும், காற்று வீசுவதற்கும், மலர் மணம் கமழ்வதற்கும் சாட்சி வேண்டுமா? அதை அந்தந்த கணத்திலேயே உணர முடியவில்லையா? உன் மனத்தில் அன்புப் புனல் பாய்ந்து கொண்டிருக்கும் வரையில் அது எனக்குத் தெரிந்து கொண்டுதான் இருக்கும். நான் எங்கே இருந்தாலும் இந்த அன்பு வெள்ளம் என்னை நோக்கிப் பாய்ந்து வந்து கொண்டே இருக்கிறது" என்றேன்.

இந்து என் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அவளுடைய நீண்ட இமைகள் என் கைகளில் குறுகுறுத்தன. கையை எடுக்கவே கூடாதென்று தோன்றியது. அவளுடைய களைப்படைந்த கண்களைத் திறக்க அனுமதிக்கக் கூடாதென்று

தோன்றியது. அவளை... என் எண்ணம் தொடர்வதற்குள் இந்து சிந்தனையைக் கலைத்தாள். "உங்கள் கை ஏன் இப்படி ஜில்லென்று இருக்கிறது?" என்றாள்.

"உனக்கு இதமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான்."

இந்துவின் முகத்தில் நாணப் புன்னகை அரும்பியது. அந்த அழகில் நான் சொக்கிப் போனேன்.

மறுபடியும் கண்களில் ஒற்றிக் கொண்டாள் இந்து. அதற்குள் நேரமாகி விட்டது. இந்துவின் கதையை எடுத்துக் கொண்டு நான் கிளம்பினேன்.

இந்து என் கரத்தைப் பிடித்து நிறுத்தினாள். "இதுவரையில் எழுதியது போலவே தினமும் நீங்கள் என்ன



செய்தீர்களென்று எழுதி வைக்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"கண்டிப்பாய் எழுதுகிறேன், இந்து!" என்றேன்.

* * *

தூங்குமத்துறை வந்து சேர்ந்ததும் இந்துவின் கதையைப் படித்து முடித்தேன். அப்படியே ஒரு உணர்ச்சிச் சித்திரமாக அது விளங்குகிறது. அதைப் படிக்கும்போது அவளுடைய உள்ளத்தை, அதாவது நான் என்னுடைய உள்ளத்தையே அறிந்து கொள்வது போல் தெரிந்து கொள்ள முடிந்தது.

இந்துவுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்ற எண்ணியிருக்கிறேன். அது மட்டுமல்ல, இவைகளை நான் எழுதுவது பின்னால் எங்களுக்கே படிப்பினையாக இருக்கும். நாங்கள் செய்த தவறுகள் தெரியும். இந்துவின் பிடிவாதத்தாலும், விரக்தி மனப்பான்மையாலும் இன்னும் சிக்கலாகிவிட்ட விஷயத்தை முடிச்சு அவிழ்க்க நான் எப்படியெல்லாம் முயற்சித்தேன் என்பதை அவள் பிறகுதான் தெரிந்து கொள்ள வேண்டும்.

* * *

இன்று ஒரு விந்தை நிகழ்ந்தது. நான் இந்துவின் கதையை இரவு வெகு நேரம் படித்தேன். அதற்குப் பிறகும் தூக்கம் வரவில்லை. அதிகாலையில் எழுந்து துயரம் நிறைந்த மனத்துடன், நிராசையால் நைந்த நெஞ்சுடன் பாதிரித் தோட்டத்துக்குச் சென்றேன்.

எங்கள் அன்பு வளர்ந்த அந்தத் தோட்டத்தைப் பார்த்தபோது என் நெஞ்சில் சிறிது இன்பம் சுரந்தது. பிறகு அந்த தோட்டம் எங்களுடைய அன்புக்குச் சமாதியாகவும் ஆகிவிடுமோ என்று தோன்றியதும் மனத்தில் பொறுக்க முடியாத வேதனை ஏற்பட்டது. அப்போது நான் வழக்கமாக உட்கார்ந்து என் கதையை எழுதிய இடத்தில் ஒரு கவர் கிடப்பதைக் கண்டேன். அளவிலாத ஆச்சரியத்துடன் அதை எடுத்துப் பிரித்துப் படித்தேன்.

"ஊமையன் கோட்டைக்கு உடனே வரவும். முக்கியமான விஷயங்கள் பல தெரிவிக்கிறேன். —பகத்சிங்" என்று எழுதியிருந்தது.

ஆவல் என்னை உந்தித் தள்ள நேரே மலைமீது ஏறிச் சென்றேன். பசி தாகம் எதுவும் தெரியவில்லை. ஆவல் என்பது ஒன்றுதான் உலகத்தில் இருப்பதாக எனக்குத் தோன்றியது.

நான் அவ்வளவு சிரமப்பட்டு ஏறிச் சென்றது வீண் போகவில்லை. மலைமீது எனக்கு முன்னால் யாரோ ஏறிச் சென்று கொண்டே இருப்பதாக எனக்கு ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. பாதைக்குப் பக்கத்தில் சில சமயம் சந்தடி கேட்கும். அதற்குக் காரணம் படிகள் போல அமைந்துள்ள மலைப் பாதையில், மேலே உள்ள பாதையிலிருந்து கற்கள் விழுவதுதான் என்று தெரிந்து கொண்டேன்.

எனக்குப் பரபரப்பு அதிகமாயிற்று. இந்துவின் கதை மூலம் பகத்சிங்கைப் பற்றி நான் தெரிந்து கொண்டிருந்ததனால் ஒரே ஓட்டமும் நடையுமாக ஏறிச் சென்றேன். நேரமாக ஆக என் கால்கள் தள்ளாடின. சரியான தூக்கமும், ஆகாரமும் இல்லாததால் எனக்கு உடல் சோம்பச் சோர்ந்துபோயிருந்தது.

ஆகவே மலைமீது ஏறுவது ஒரு சோதனை யாக இருந்தது. பல்லைக் கடித்துக் கொண்டு ஏறிச் சென்றேன்.

இடிந்து சிதிலம் சிதிலமாகக் குட்டிச் சுவர்களுடன் நின்ற கோட்டையைப் பார்த்தபோது எனக்கு என்னுடைய வாழ்க்கையைப் பார்ப்பது போலிருந்தது. என் வாழ்க்கை இப்படித்தானே இருந்தது? நான் கட்டிய கோட்டைகள் எல்லாம் விழுந்து விட்டன. ஆனால் அஸ்திவாரம் இருக்கிறது. அதைத் திருப்பக் கட்ட முடியுமா? அதற்குப் 'பகத் சிங்' உதவி செய்வாரா என்று எண்ண மிட்டேன்.

கோட்டையின் அருகில் சென்றதும் எனக்கு உள்ளே போகத் தயக்கமாக இருந்தது. முன்பு எப்போதோ மந்திர மூர்த்திப் பண்ணையார் ஊமையன் கோட்டையில் "சொக்கையாப் பாண்டியனைக் கொண்டு வா!" என்று ஒரு ஆவி சத்தம் போட்டுக் கொண்டிருப்பதாகக் கூறியது ஞாபகம் வந்தது. பட்டப் பகலில் எனக்குப் பயம் உண்டாவதைக் குறித்து நானே வெட்கமடைந்தேன்.

'ஒருவேளை இது ஈசுவர மூர்த்தியின் சூழ்ச்சியாக இருக்குமோ? இங்கே என்னைக் கொன்று போட்டு விட்டால் கூட யாராலும் கண்டு பிடிக்க முடியாதே. இந்துவின் கதி என்ன ஆகும்? அசட்டுத் தைரியத்தினால் துன்பத்தை வரவழைத்துக் கொள்வதா என்றும் தோன்றியது. பின்னர் "பகத்சிங்" என்று கையெழுத்திட்டு வேறு யாராலும் கடிதம் எழுதியிருக்க முடியாது என்று தீர்மானித்தேன்.

இடிந்த கோட்டை வாசலில் நான் ஒரு அடி எடுத்து வைத்ததும் எதிரே யிருந்து ஒரு உருவம் வெளிப்பட்டது. அதைக் கண்டு நான் திக்பிரமை அடைந்தேன்.

## அத்தியாயம் 18
## காசிலிங்கத்தின் கதை

உள்ளத்தின் படபடப்பு அடங்கியதும் அந்த உருவம் மனித உருவந்தான் என்று எனக்குப் புரிந்தது. யோசிக்கும் சக்தி ஒரு கணத்துக்குப் பிறகுதான் வந்தது. இந்த முகம் யாருக்குச் சொந்தமானது?...... ஆ! இதோ நினைவுக்கு வந்து விட்டது. இது என்னை முன்னொரு காலத்தில் காப்பாற்றிய உத்தமரின் முகம்தான். பிறகு இந்துமதியின் வீட்டிலிருந்த போட்டோ ஆல்பங்களில் பார்த்த அவளுடைய தந்தையின் முகம் தான். ஆனால் இப்பொழுது எவ்வளவு மாறிப் போய் விட்டது?

எதிரே கண்ட மனிதரை என்னால் ஒரு மனிதராக எண்ண முடியவில்லை. உருவம் என்றுதான் நினைக்க முடிந்தது. தலை வெண்மையாய் நரைத்திருந்தது. உடல் குச்சி மாதிரி இருந்தது. தாடியும் மீசையும் வளர்ந்து அதன் உள்ளே கண்கள் ஒளிந்து கொண்டிருந்தன. எனக்குப் பயில்வான் காசிலிங்கத்தை அந்த நிலையில் பார்த்த போது தாங்க முடியாத விசனம் உண்டாயிற்று. வார்த்தைகளே வெளி வரவில்லை.

"என்ன தம்பி! மரம் போல நின்று விட்டாயே? என்னைத் தெரியவில்லையா உனக்கு? என்னைச் சொக்கையாவின் ஆவி என்று நினைத்து விட்டாய் போல் இருக்கிறது!" என்று கரகரத்த, கம்பீரமான குரலில் கேட்டார் காசிலிங்கம்.

"உங்களை என்னால் மறக்க முடியுமா? ஆனால் இந்த நிலையில் பார்த்ததால் திகைத்துப் போய் விட்டேன்."

"நீ ரொம்பக் களைப்பாக இருக்கிறாய். வா, நான் கூட்டு வைத்திருக்கும் சோளக் கொண்டையைச் சாப்பிட்டு விட்டுத் தண்ணீர் குடி. பிறகு பேசலாம்" என்று என் கையைப் பிடித்து உள்ளே அழைத்துச் சென்றார் காசிலிங்கம்.

கோட்டையின் ஒரு மூடுக்கில் ஒரு அடுப்பு புகைந்தது. அதன் அருகில் சோளக் கொண்டைகள் கூட்டு வைக்கப் பட்டிருந்தன. என்னுடைய பசிக்கு அந்தச் சோளம் மிக ருசியாக இருப்பதாகத் தோன்றியது.

நான் அங்கே விழுந்து கிடந்த ஒரு கல் தூணின் மீது உட்கார்ந்தேன். அவரும் உட்கார்ந்தார்.

"தம்பி! உன்னிடம் எவ்வாறு பேச்சை ஆரம்பிப்பது என்று தெரியவில்லை. நீ பாவம்! ரொம்பத் துன்பப் படுகிறாய் என்று உன்னைப் பார்த்தாலே தெரிகிறது. ஆனால் நீயாவது அவளுக்கு அருகில் இருக்கிறாய். நான் அவளுக்கு அருகில் வரக்கூட முடியாது. ஐயோ! குழந்தையின் மனம் தனக்கு விதித்த தண்டனையைப் பற்றிக் கேட்டபோது என்னபாடு பட்டிருக்கும்? எல்லாம் இந்தப் பாவியால் வந்தது. நான் உலகத்தினரைப் போல என் மனைவியுடனும்

குழந்தையுடனும் வாழ்க்கை நடத்தியிருந்தால் இப்படியாகியிருக்குமா? என் கண்மணிக்கு விதிக்கப்பட்ட தண்டனையைக் கேட்டு இப்படி நான் தவிக்க நேர்ந்திருக்குமா? நான் செய்த பாவம்! ஐயோ! சந்திரமணி! உனக்கும் குழந்தைக்கும் நான் துரோகம் செய்து விட்டேன்" என்று கூறி விட்டுத் தலையில் படீர் படீரென்று அடித்துக்கொண்டார்.

நான் வேகமாக எழுந்து அவர் கையைப் பிடித்துக் கொண்டேன். "பதறுகிறீர்கள். இன்னும் ஒன்றும் ஆகி விடவில்லையே? இந்து குற்றவாளி இல்லை என்பதை நிரூபிக்கத்தானே நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். எனக்குத் துணையாக நீங்களும் இருக்கிறீர்கள் என்பதால் எனக்கு அளவில்லாத நம்பிக்கை ஏற்படுகிறது. அவளை



எப்படியும் காப்பாற்றி விடலாம் என்று தைரியம் பிறக்கிறது."

"நிச்சயமாக என் குழந்தையைக் காப்பாற்றுவாயா? என் கண்மணியை மரண தண்டனையிலிருந்து மீட்பாயா? என்னை நினைத்துப் பார் தம்பி! நான் செய்த பாபம் என்னைத்தான் பிடித்ததென்றால் என் குழந்தை, ஒன்றுமறியாத இந்துவையுமா பிடிக்க வேண்டும்? அந்தப் படுபாவி சொக்கையா என் வாழ்க்கையையும் கெடுத்தான். என் குழந்தையின் வாழ்க்கையையும் குலைத்து விட்டானே? சந்திரமணி உயிரோடு இருந்தால் இப்படி நடப்பதைப் பார்த்துச் சகிப்பாளா? நல்ல வேளையாக அவள் செத்துப் போய் விட்டாள். இந்துமதியின் தண்டனையைப் பற்றிப் பத்திரிகையில் படித்தது முதல் சந்திரமணியின் ஆவி என்னைச் சுற்றுகிறது. தம்பி! என்னைப் பார்த்து, 'நீதான் என் கண்மணியை நிர்க்கதியாய் விட்டாய். உன்னால்தான் என் குழந்தை சிறையில் கண்ணீர் வெள்ளத்தில் மிதக்கிறாள். உன்னால்தான் என் குழந்தை மரண தண்டனை அடையப் போகிறாள்' என்று கூறிக் கொண்டே இருக்கிறாள். என்னால் அந்தப் புலம்பலைச் சகிக்க முடியவில்லையே, என்ன செய்வேன்?" என்று விம்மினார் காசிலிங்கம்.

அவருடைய துயரத்தைக் கண்டதும் எனக்கும் என் துயரம் குபீரென்று பொங்கி வந்தது. ஒரு தந்தையின் சோகம் எப்படி இருக்குமென்பதை நான் அறிந்ததில்லை. இந்துமதியை எத்தனையோ வருஷங்களாகப் பிரிந்திருந்தவர் காசிலிங்கம். ஆயினும் அவருக்குத் தன் அருமைப் புதல்வியின் மீது என்ன வாஞ்சை? கிட்டத்தட்டப் பைத்தியம் பிடித்த நிலையை அடைந்து விட்டாரே! பாவம்!

நானும் துயரம் தாங்காமல் கண்ணீர் விட்டேன். இந்த வழக்கில் நான் இந்து நிரபராதி என்று சந்தேகமற நிரூபிக்க முடியாவிட்டால் என்னவாகும்? அதை நினைக்கும்போதே என் அங்கங்களெல்லாம் பதறின.

என்னைப் பார்த்த காசிலிங்கம் உடனே தம் புலம்பலை நிறுத்தினார். அவருடைய கண்ணீரும் நின்றது.

"தம்பி! உன்னை நான் இங்கே வரச் சொன்னது என் பாப புண்ணியங்களைப் பற்றி ஆராய்வதற்காகவோ, அல்லது நான் படும் வேதனையைப் பகிர்ந்து கொள்ளவோ அல்ல. உன்னை இப்படி மனம் நோகச் செய்துவிட்டேனே என்று வருத்தமாக இருக்கிறது."

"நீங்களா என் மனத்தை நோகச் செய்தீர்கள்? என்று நான் சிறை சென்றேனோ அன்று முதல் என் மனம் நொந்து கொண்டுதான் இருக்கிறது. இந்துவை முதலில் சிறைப்படுத்தியது முதல் நெஞ்சம் எரிமலையைப் போல் குமுறிக் கொண்டிருக்கிறது. உண்மையில் உங்களைப் பார்த்த பிறகு எனக்கு ஆறுதல் ஏற்பட்டிருக்கிறதென்று கூற வேண்டும். உங்களுடைய துயரைவிட என் துயரம் அதிகமானதல்ல என்று தேற்றிக் கொள்கிறேன்."

"அப்படிச் சொல்வது சரியல்ல, தம்பி! என் வாழ்க்கை இனிமேல் ரொம்ப நாள் இல்லை. ஆனால் உனக்கு இப்போதுதான் தொடங்கியிருக்கிறது. நான் ஆரம்பத்தில் சந்திரமணியை மணந்து கொண்டபோது நடந்ததையெல்லாம் நினைத்துக் கொண்டால், குழந்தைகளாகிய நீங்கள் இருவரும் எங்களைப் போலக் கொஞ்ச நாளாவது இருக்க வேண்டுமென்று ஆசையாக இருக்கிறது. அதன் பிறகு இந்துமதி செத்துப் போனால் கூடப் பரவாயில்லை. அந்த இன்ப நினைவு களிலேயே காலம் கழித்து விடலாம்.

நான் என் யோசனையைச் சொல்கிறேன். அதைப் பற்றி முடிவு செய்ய வேண்டியது நீதான்'' என்றார்.

''நீங்கள் வெறும் யோசனை மட்டும் சொன்னால் போதாது. உங்களுக்குத் தெரிந்தவரையில் இந்தக் குங்குமத் துறைக்கு நீங்கள் வந்ததிலிருந்து நடந்த எல்லா விவரங்களையும் எனக்குச் சொல்ல வேண்டும். அப்படிச் சொன்னால் அதிலிருந்து இந்துவை நிரபராதி என்று நிரூபிக்க எனக்கு ஏதேனும் விஷயம் கிடைக்கலாம்'' என்றேன்.

காசிலிங்கம் தம் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். ''இதை நானே உன்னிடம் சொல்ல வேண்டுமென்று நினைத்தேன். நீயே கேட்கிறாய். எப்படி ஆரம்பித்துச் சொல்வது என்றுதான் எனக்குப் புரியவில்லை'' என்று கூறிவிட்டுச் சிறிது தண்ணீர் பருகினார். சற்று யோசித்தார். பிறகு தம்முடைய கதையைச் சொல்ல ஆரம்பித்தார்:

இடிந்த கோட்டையின் சூழ்நிலைக்கு மத்தியில் காசிலிங்கம் தம்முடைய துயரமான வரலாற்றைக் கூற ஆரம்பித்தார். நான் கேட்கும்போதே பல சமயங்களில் கண்ணீர் விட்டு விட்டேன். அவருடைய வார்த்தைகளிலேயே அந்த அதிசயக் கதையை எழுதுகிறேன்.

''நான் இந்த ஊருக்கு வந்தபோது இந்து பிறக்கவில்லை. மந்திரமூர்த்தி என்ற புண்ணியமூர்த்தி எங்களுக்குப் புகலிடம் அளித்திரா விட்டால் நாங்கள் இன்னும் எத்தனையோ கஷ்டங்களை அடைந்திருப்போம். அவர் அவ்வளவு தூரம் எங்களிடம் பிரியம் காட்டியதற்குப் பாவியான நான் என்ன செய்தேன்? ஒன்றும் செய்யவில்லை. அவருக்குப் பாரமாக என்னுடைய மனைவியையும், குழந்தையையும் விட்டு விட்டு ஓடிப் போனேன்......''

''அது என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? இந்து அவருக்குப் பாரமாகவே இல்லை. அது எனக்கு நன்றாகத் தெரியும். அவருக்குக் கிடைக்காத செல்வத்தை நீங்கள் அளித்தீர்கள்'' என்றேன் நான்.

''அது உண்மைதான் தம்பீ. அந்தப் பெரியவருடைய பெருந்தன்மை அவ்வாறு எண்ணியது. சாதாரண மனிதர்களாக இருந்தால் என் மனைவியைச் சமையல்காரியாக நினைத்திருப்பார்கள். ஆனால் அவர் இருவரையும், தம்முடைய பெண்ணும், பேத்தியுமாக நினைத்தார். அவர் அவ்வளவு நல்லவராக இருந்ததால்தான் நான் ஓடிப் போனேன். இல்லா விட்டால் இருவரையும் நிர்க்கதியாய் விட்டுப் போயிருப்பேனா?



எலி :— பொறியிலே மசால்வடை வைக்கிறப்பலே இருக்கே. ராத்திரிக்கும் பொறியிலே நீ விழறியா? இல்லே, நான் விழட்டுமா?

பார்! சில மிக நல்ல விஷயங்கள் கூடச் சில சமயங்களில் தீமையாக முடிகின்றன...அது கிடக்கட்டும். என் கதையைச் சொல்கிறேன் கேள்.

இங்கு வந்தது முதல் நாங்கள் ஆனந்தமாக இருந்தோம். இந்து பிறந்த பிறகு குதூகலம் அதிகமாயிற்று. அந்த ஜமீன்தார் சிநேகம் மட்டும் எனக்குக் கிடைத்திராமலிருந்தால் நாங்கள் சந்தோஷமாகவே இருந்திருப்போம்.

தங்கபாண்டியனுடைய தந்தை என்னிடம் நம்பிக்கை கொண்டார். தம்மிடம் விரோதம் பாராட்டியவர்களைப் பற்றியெல்லாம் கூறினார். ஒருநாள் தம்மை யாரோ தொடர்ந்து வருவதாகத் தமக்குத் தோன்றுவதாகவும், இரவில் தம் அறைக்கு வெளியே யாரோ நடமாடுவதாகத் தமக்குத் தோன்றுவதாகவும் கூறினார். இப் பயப் பிராந்தியினால் அவர் பல இரவுகள் தூங்குவதில்லை என்பதையும் நான் அறிந்திருந்தேன்.

'காசிலிங்கம்! என் குடும்பத்திலேயே ஒரு சாபக்கேடு இருக்கிறது. ஏழு தலைமுறையாக எங்கள் குடும்பத்தில் ஜமீன்தாராக இருந்தவர்கள் யாரும் இயல்பாக இறந்து போனதில்லை. ஒருவேளை எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என் மகனைக் கவனித்துக் கொள்ளுங்கள். அவனையும் ஏதும் செய்துவிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று ஜமீன்தார் ஒரு நாள் கூறினார்.

இப்படி இருக்கையில் நான் ஒருநாள் அவர் கொலை செய்யப்பட்டு இறந்து

# உண்மைதான்!




போனர். நான் அந்தக் கொலை செய்த தாகப் பழி சுமத்தப் பார்த்தார்கள்.

தெய்வாதீனமாக அதிலிருந்து தப்பி நான் திரும்பி வந்தேன்.

பிறகு ஒருதடவை நானும் சந்திரமணி யும் மலைச்சாரலில் சொக்கையாவைச் சந்தித்த பொழுது அவனிடம் இருந்த வாலறுந்த நாய் என் சிந்தனையைத் தூண்டியது. அதை எங்கே பார்த்திருக்கிறேமென்று என் மண்டையைப் போட்டு உடைத்துக் கொண்டேன். கடைசியில் என் நண்பனை புகைப்பட நிபுணர் சேகரின் புகைப்பட ஆல்பத்தில் பார்த்திருக்கிறேனென்பதும், அதைப் பற்றி அவன் கூறிய விஷயமும் ஞாபகத்துக்கு வந்தன.

அந்த வாலறுந்த நாய் சொக்கையாப் பாண்டியரின் ஒன்றுவிட்ட சகோதரருடையது. அவருக்கு நிறையச் சொத்துக்கள் இருந்தன. ஆனல் அவருக்குச் சந்ததி இல்லை. புகைப்பட நிபுணர் சேகரின் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் அவர் இருந்தார். சேகருக்குப் படம் பிடிப்பதில் உள்ள ஆசையால் எதைக் கண்டாலும் படம் பிடித்து வைப்பார். ஒருநாள் சொக்கையாவின் சகோதரர் முத்துராமலிங்க பாண்டியர் நாயுடன் நடந்து செல்லும்போது பின் பக்கத்திலிருந்து படம் எடுத்தார் சேகர். அவர் அறியாமல் இன்னும் இரண்டு மூன்று படங்களும் எடுத்தார்.

இந்தப் படங்களை எடுத்த இரண்டு நாட்களுக்கெல்லாம் சொக்கையா பக்கத்து வீட்டுக்கு வந்து சேர்ந்தார். தோட்டத்தில் நிற்கும்போது இந்தச் சொக்கையாவை அடிக்கடி பார்த்திருக்கிறர் சேகர். வேலைக்காரர்கள் மூலம் முத்து ராமலிங்க பாண்டியருக்கு இவர் தம்பி முறை ஆகவேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டார்.

சொக்கையா சேகருடன் சிநேகம் செய்து கொண்டார். அவருடைய படங்களை வியந்து பாராட்டினர். தம்மைக் கூடப் போட்டோ எடுக்கச் சொன்னர். அதற்கு நிறையப் பணம் கொடுத்தார். சொக்கையாவுக்கு வேட்டையில் மிகப் பிரியம். அவர் வீட்டுத் தோட்டத்தில் இருக்கும் மரங்களில் துள்ளி ஓடும் அணில்களையோ, சத்தமிடும் காக்கைகளையோ கூடச் சில சமயம் தம் வேட்டைத் துப்பாக்கியினல் பயிற்சிக்காகச் சுட்டுப் பார்ப்பதுண்டு.

ஒருநாள் சொக்கையாப் பாண்டியர் ஒரு மரத்தில் உட்கார்ந்திருந்த ஏதோ ஒரு பறவையைக் குறி பார்த்துக்கொண்டிருந்தபோது தற்செயலாகக் கையில் காமிராவுடன் அங்கே சென்ற சேகர் சட்டென்று அதைப் படம் பிடித்தார். இதைச் சொக்கையா கவனிக்கவில்லை.

ஒருநாளிரவு சேகர் தம் வீட்டு மாடியிலிருந்து பார்த்தபோது பக்கத்து வீட்டு மாடியில் கண்ணாடி ஜன்னலில் நிழலைக் கவனித்தார். உள் பக்கத்தில் ஒரு மங்கலான வெளிச்சம் இருந்திருக்க வேண்டும். கண்ணாடி ஜன்னல் மூடியிருந்தது. அதன்மீது விழுந்த நிழலைப் பார்த்த போது கையில் ஒரு துப்பாக்கியுடன் யாரோ ஒருவர் செல்வதாகத் தோன்றியது சேகருக்கு. சிறிது நேரத்துக்கெல்லாம் விளக்கு அணைந்து விட்டது. வெகுநேரம் அங்கு நின்றிருந்தும் சேகருக்கு ஒன்றும் தெரியவில்லை. சேகரின் மனத்தில் இனந்தெரியாத ஒரு பயம் உண்டாயிற்று. (தொடரும்)




# இந்த முக க்ஷவரப் பரீக்ஷையை நீங்களே செய்து பாருங்கள்

சிறந்த பிளேட் எது என்பதை சுலபமாக நிர்ணயிக்க, எந்த பிளேட் வெகுகாலம் கூர்மையுடன் இருக்கிறது எனக் கவனியுங்கள். ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள் மழமழப்பானது. ஒவ்வொரு பிளேடும் அதிகப்படியான சுக க்ஷவரங்களை அளிக்கின்றன என்று உங்களுக்குத் தெரியவரும். இதனால் உங்கள் பணம் மிச்சமாகிறது. வேறெந்த பிளேடுகளைக்காட்டிலும் ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள்தான் நீங்கள் செலவழிக்கும் பணத்திற்கு அதிகப்படியான பெறுமானம் அளிக்கிறது. இன்றே அவைகளை வாங்கி பரீக்ஷியுங்கள்.




**7 o'clock BLADES**

ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள்

போட்டிக் கதை




எதிரே திசை முகடு வரை பரவி யிருந்த நீர்ப் பரப்பு, சிகரம் இல்லாத மலை போலக் காணப்பட்டது. குமரிக் கடல் வந்து விட்டது என்று தெரிந்து கொண்டேன். குழந்தைப் பருவத்தில் நான் முதன் முதலாகப் பார்த்த போது என்னை மதி மயங்கச் செய்த அந்தக் காட்சி—பரந்த கடல் உயர்ந்த மலை போலக் காட்சி அளிக்கும் அந்தத் தோற்ற மயக்கம் — வருஷக் கணக்காகப் பழகிய பின்பும் என்னை வியப்பில் ஆழ்த்தத் தவறுவதில்லை. ஆனால் இம்முறை வியப்பு மட்டுமல்ல, சோகமும் ஆற்றாமையும் சூறைக் காற்றில் எழும் பேரலைகள் போல என் மனத்தில் ஒன்றுக்கு மேல் ஒன்றாக எழுந்து மோதிச் சிதறின. என் மனம் புயலில் கடல் போலக் கொந்தளித்தது. தலை கிறுகிறுத்தது. மயக்கம் வந்துவிடும் போல் இருந்தது.

'அவ'ருடைய கை மெதுவாக என் தோளைப் பற்றிப் பரிவோடு அழுத்தியதை உணர்ந்தேன். காதலும் கனிவும் நிறைந்த அந்தக் கரஸ்பரிசம் தான் என்னை ஒரே 'அடி'யாக உணர்விழக்காமல் காப்பாற்றியது.

அந்த ஸ்பரிசம் வேறு நினைவுகளைத் தூண்டி விடவே, திரும்பிப் பார்த்தேன். காரின் பின் சீட்டில் சமையல்காரியின் மடியில் தலை வைத்துக்கொண்டு தூங்கிக்கொண்டிருந்தான் குழந்தை சேகர். அவன் முகத்தில் மோகனப் புன்னகை ஒளி பரப்பிக் கொண்டிருந்தது. எந்தக் கந்தருவக் குழந்தைகளோடு கனவில் ஆடிக் களித்துக் கொண்டிருக்கிறானோ, யார் கண்டது!

சேகருக்கு இப்போது ஐந்து வயது. அவன் ஒருவயதுக் குழந்தையாய் இருந்தபோதுதான்..

மறுபடியும் என் தலை சுற்றியது. கண்கள் இருண்டன. மிகுந்த பிரயாசையின் பேரில் சமாளித்துக் கொண்டேன். நல்ல வேளையாக அதற்குள் காரும் ரெஸ்ட் ஹவுஸுக்குள் நுழைந்தது.

விருந்தினர் விடுதியில் தனியே உட்கார்ந்து கொண்டு நீலக் கடலைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவருக்கு நாகர்கோவிலில் கொஞ்சம் வேலை இருந்தது. அதற்காகப் போய் விட்டார். குழந்தையும் சமையல்காரியும் சாப்பிட்டு விட்டுத் தூங்கிவிட்டார்கள். பிரயாண அலுப்பும் கடல் காற்றும் சேர்ந்தால் தூக்கம் வருவதற்குக் கேட்பானேன்!

என் உடம்பும் உள்ளமும் சோர்ந்திருந்தன. ஆனால் தூக்கம் வரவில்லை.

தொடுவானத்தில் கன்னங்கரிய மேகத் திரள் கடலின் மடியில் தவழ்ந்து கொண்டிருந்தது. அதனால் தானோ என்னவோ, கடலின் அட்டகாசம் பல மடங்கு அதிகமாகி விட்டது போலத் தோன்றியது. கரையோரத்தில் கிடந்த பாறைகளை நொறுக்கி விடுவது போல ராட்சஸ அலைகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து மோதி ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தன. பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத பயங்கர அழகு.

ஆனால் என் மனம் அந்த அழகில் ஈடுபடவில்லை. நினைவு அலைகள் என் மனவுறுதியைச் சிதற அடித்து விடும் போலக் கொந்தளித்துக் கொண்டிருந்தன.

ரவி என் அருகில் உட்கார்ந்திருப்பது போலவும் தனக்கே இயல்பான தோரணையில் வாய் ஓயாமல் பேசிக்கொண்டு போவது போலவும் பிரமை உண்டாயிற்று.

குழந்தைப் பருவம் முதல் எத்தனை தடவை இந்தக் குமரிக் கடலைப் பார்க்க நாங்கள் வந்திருக்கிறோம்! எத்தனை தரம் இதன் பல வர்ண மணல் பரப்பில் ஆடிக் களித்திருக்கிறோம்! தாயற்ற குழந்தைகளான எங்களுக்கு இந்தக் கடலே தாய் போலத் தோன்றும். இதன் அலைகள் தாயின் கரங்கள் போல அரவணைப்பது போலவும், இதன் மணல்பரப்பு அன்னையின் மடி போல் இதம் தருவது போலவும் தோன்றும். இது இவ்வளவு கொடிய

தாக மாறும் என்று அப்போது நான் கனவில் கூட எண்ணியதில்லை.

ஆனால் கடைசி நாட்களில் ரவி இதன் கொடுமையைப் பற்றிக் கதை கதையாகச் சொல்லுவான்.

"இதன் அழகைக் கண்டு ஏமாறாதே, அக்கா! எத்தனையோ சாம்ராஜ்யங்களை விழுங்கி ஏப்பம் விட்டிருக்கிறது இந்தக் கடல்! இதை இளங்கோ 'கொடுங் கடல்' என்று சொல்லுகிறார், தெரியுமா!" என்பான்.

சாதாரணமாகவே வாயாடியான அவனுக்குக் குமரிக் கடலைப் பார்த்து விட்டால் உற்சாகம் பொங்கும். புதிது புதிதாகக் கற்பனைகள் தோன்றும். அலைகளின் அழகை விதம் விதமாக வர்ணிப்பான்.

அவன் வர்ணிப்பதற்கு ஏற்றாற்போல அந்த அலைகளும் நிமிஷத்துக்கு ஒரு புது அழகைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கும். இந்த நிமிஷம் அலைகள் தண்ணீர் மலைபோல மௌனமாகக் கரை அருகே வரும். மறு நிமிஷம் பிரும்மாண்டமான பளிங்குப் பாம்பு படம் எடுப்பது போல மடியும். அந்த நிலையில் அவற்றைப் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாது. சில கணங்கள் அப்படியே துடித்துக் கொண்டிருந்த தலைக் கனம் தாங்காமல் 'ஓ'வென்று இரைந்து கொண்டு மடாரென்று விழுந்து சிதறி நுரை மயமாக நெடுந்தூரம் வரை பரவி விட்டு அலைகள் மாய்ந்து போகும்.

கடலில் குளிக்கும்போது ரவி ஒவ்வொரு அலையையும் ஒவ்வொரு பேர் சொல்லி அழைப்பான். அவைகளுடன் புரளுவான். நீர் நாய்போலக் கைகளைப் 'படார்' 'படார்' என்று அடித்துக்கொண்டு நீந்துவான்.

"டேய் பரட்டை! உன் பிதப்பை எல்லாம் என்னிடம் காட்டாதே!" என்று ஒரு அலையிடம் சொல்லுவான். அதற்குள் மூர்த்திய அலை கரையிலிருந்து திரும்பி அவனை வீழ்த்தப் பார்க்கும்.

"ஏண்டா, கால் வாரி! இதென்னடா பேடித்தனம்! பின்னாலே வந்து தாக்குகிறாய்!" என்று சொல்லிச் சிரிப்பான். அவன் செய்யும் அட்டகாசத்தைப் பார்ப்பவர்கள் அவனைக் கிறுக்கன் என்று நினைத்தால் ஆச்சரியமில்லை. ஆனால் கரையிலிருந்து பார்த்துக் கொண்டிருக்கும் எனக்கு அவனுடைய பொங்கும் உற்சாகமும் இளமைத் துடிப்பும் உடல் வாகுவும் ரொம்பப் பெருமையாய் இருக்கும்.

குமரியின் கோயிலுக்கு மேற்குப் புறம், சுமார் அரை மைல் தூரத்தில் ஒரு அழகான மணல் மேடு உண்டு. அது ரவிக்கு ரொம்பப் பிடித்த இடம். அந்த வெள்ளி மணல்மேட்டில் கழுத்தளவுக்கு மேல் புதைந்திருந்த தென்னை மரங்களைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு அலுக்காது. "குமாரில பட்டர்கள்" என்று அவற்றை அன்போடு அழைப்பான்.

"குமாரில பட்டர் கழுத்தளவு உமியில் நின்றுகொண்டு அதில் நெருப்பு வைத்து அணு அணுவாக உயிரைத் தியாகம் செய்ததாகச் சொல்லுகிறார்கள். அது அற்புதமான செயல் தான். ஆனால் இந்த அற்புதம் அதற்கு மேலல்லவா இருக்கிறது! கழுத்தளவு மணலில் புதைந்த பிறகும் இந்த மரங்களில் என்ன செழுமை! என்ன ஜீவ ஒளி! எப்படிக் காய்த்து உலுப்பி இருக்கின்றன, பார்! நிராசையோ, சோர்வோ இவற்றின் அருகே கூட வர முடியவில்லையே, என்ன அற்புதம்!" என்று சொல்லிச் சொல்லி வியப்பான்.



இந்த நினைவு என்னைத் தாக்கிவாரிப் போட்டது. எப்போதும் ஒரே உற்சாகமும் களிப்புமாக இருந்த ரவி போய் விட்டான். அவன் நினைவு, கனலும் உமிக்குவியல் போல என்னை அணு அணுவாக வதைத்துக் கொண்டிருக்கிறது. குமாரில பட்டர் தம் தவறுக்குப் பிராயச் சித்தம் செய்வதற்காகத் தம் கையாலேயே உமிக் குவியலுக்கு நெருப்பு வைத்துக் கொண்டார். ஆனால் நான்......!

என்னை அணு அணுவாக எரிக்கும் இந்த நெருப்பும் நானே வைத்துக் கொண்டதுதான்.

* * *

ரவிக்கும் எனக்கும் வயதில் அதிக வித்தியாசம் இல்லை. நான் அவனைவிட மூன்று வயது பெரியவள். அவ்வளவுதான். ஆனால் அறியாப் பருவத்திலேயே தாயைப் பறிகொடுத்து விட்டோம். ஆதலால் சிறு வயது முதல் நானே அவனுக்குத் தாயாக இருந்து வந்தேன். தன் குறைகளை அவன் என்னிடம்தான் சொல்லுவான். பிரதாபங்களை என்னிடம்தான் அளப்பான். அப்பா எங்களிடம் உயிரையே வைத்திருந்தார். இருந்தாலும் ரவி அவரிடம் அதிகமாகப் பேச மாட்டான்.

அப்பாவுக்குக் கன்னியாகுமரி மேல் ஒரு தனிக் கவர்ச்சி. வருஷந்தோறும் கோடை விடுமுறைக்கு அங்கேதான் போவார். அப்போது நாங்களும் அவருடன் போவோம். எனவே, குமரிக் கடல் எங்களுக்குத் தாய்போல் நன்றாகப் பழகி விட்டது.

ரவிக்கு எப்போதுமே முரட்டுத்தனமாகக் காரியங்கள் செய்வதில் உற்சாகம் உண்டு. வயது ஆக ஆக அவனுடைய முரட்டுத் துணிச்சல் அதிகமாயிற்றே தவிரக் கொஞ்சம் கூடக் குறையவில்லை.

கன்னியா குமரியில் விவேகானந்தர் நீந்திச் சென்று தவம் புரிந்ததாகச் சொல்லப்படும் பாறை ஒன்று உண்டு. அந்தப் பாறை வரை நீந்திப் போவது மிக அபாயமான காரியம். ஆனால் ரவிக்குத் தானும் ஒருதரமாவது அதுவரை நீந்திப் போய்விட வேண்டுமென்று ஆசை. அப்பா போகவிட மாட்டார் என்று அவனுக்குத் தெரியும். எனவே, ஒரு நாள் காலையில் அவர் கோயிலுக்குப் போயிருந்த சமயம் பார்த்து, நான் எவ்வளவோ சொல்லியும் கேளாமல், கடலில் குதித்து விட்டான். ஆள் உயரத்துக்கு எழும்பிக் கொந்தளித்த அலைகளோடு போராடிக் கொண்டு அவன் நீந்திப் போனதைப் பார்த்து என் மனம் பட்ட பாட்டை நானே அறிவேன். ஆனால் அவன் விடாப்பிடியாக முயன்று அந்தப் பாறையை எட்டிப் பிடித்து, பல முறை சறுக்கி விழுந்தபின் கடைசியில் ஒரு விதமாக அதன்மேல் ஏறி நின்றபோது என் மனப் பதைப்பெல்லாம் எங்கேயோ போய் விட்டது. பெருமையால் உள்ளம் பூரித்தது. மீண்டும் அவன் அங்கிருந்து கரைக்கு வந்து சேரும் வரை என் மனம் பதைத்தது. கரை ஓரமாக இருந்த பாறைகளில்' ஆணிகள்போல 'ஒட்டிக் கொண்டிருந்த சங்குகள் அவன் உடம்பு எங்கும் பிறாண்டி விட்டிருந்தன. காலிலும் தோளிலும் கொஞ்சம் பலமாகவே அடிபட்டிருந்தன. இருந்தாலும் கரையில் ஏறி, மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க நின்றபோது அவன் முகத்தில் தாண்டவமாடிய பூரிப்பை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது.



அதற்குள் அங்கே வந்து விட்ட அப்பா அவனை ரொம்பக் கடிந்து கொண்டார். அவனைத் தடுக்கவில்லை என்பதற்காக என்னையும் கோபித்துக் கொண்டார்.

* * *

எனக்குக் கல்யாணம் ஆன மறு வருஷம் அப்பா காலமாகிவிட்டார். கணவரின் அன்பும் கையிலிருந்த குழந்தையும்தான் அந்தப் பெரிய அதிர்ச்சியைத் தாங்கும் வலிமையை எனக்கு அளித்தன. ரவி கொஞ்ச நாளைக்கு மனம் இடிந்து போய் உட்கார்ந்திருந்தான். ஆனால் அப்புறம் அவனுக்கு இயல்பான உற்சாகமும் தெம்பும் தந்தையின் பிரிவால் உண்டான ஏக்கத்தை மாற்றி விட்டன.

மறு வருஷம் ரவி விடுமுறைக்கு ஊருக்கு வந்திருந்தபோது நாங்கள் கன்னியா குமரிக்குச் சென்றோம்.

இரண்டு வருஷங்களாகப் பாராததனாலோ என்னவோ, குமரிக் கடல் என்றும் இல்லாத அழகுடன் திகழ்ந்தது. ரவியின் உற்சாகத்துக்குக் கேட்கவா வேண்டும்! முன்னெல்லாம் பேச்சுத் துணைக்கு நான் மட்டும்தான் இருந்தேன். இப்போது இவரும் சேர்ந்து கொண்டார். எப்போது பார்த்தாலும் பேச்சும் சிரிப்பும் விளையாட்டும்தான்.

அன்றைக்கு இவர் ஏதோ காரியமாக நாகர் கோவில் போயிருந்தார். ராத்திரிதான் திரும்புவேன் என்று சொல்லி யிருந்தார். அதனால் சாயங்காலம் நானும் ரவியும் மாத்திரம் கடற் கரைக்குப் போனோம்.

சாயங்காலம் ஐந்துமணி யிருக்கும். தொடு வானத்தில் சில மேகங்கள் சிதறிக் கிடந்தன. அந்தக் காட்சி என்னைப் பரவசமடையச் செய்தது. ரவிக்கோ, உற்சாகம் பொங்கிற்று. மளமளவென்று மேலுடைகளைக் களைந்து விட்டு நீரில் இறங்கினான்.

அப்போது அங்கே ஒரு செம்படவப் பையனைத் தவிர வேறு யாரும் இல்லை.

"சாமி! இந்த வேளையில் கடலில் இறங்காதீர்கள். இது பொல்லாத வேளை, சாமீ! நாங்களே கட்டுமரமோ படகோ இல்லாமல் இறங்கப் பயப்படுவோம். எங்கேனும் சுழிப்பில் மாட்டிக் கொண்டால் அப்புறம் ஆளைக் கண்டு கொள்ள முடியாது" என்றான் பையன்.

"இதோ பார். உனக்குப் பயமா யிருந்தால் நீ இறங்க வேண்டாம். நான் எப்படிப் போனால் உனக்கென்ன!" என்றான் ரவி.

"பிறந்தது முதலே கடலோடு பழகுகிறவர் ஆயிற்றே நாங்கள்! எங்களுக்குப் பயமென்ன! ஒரு பேச்சுக்குச் சொன்னேன், அவ்வளவுதான். என்னை இந்தச் சமுத்திரமில்லை, இதனுடைய பாட்டன் வந்தாலும் ஒன்றும் செய்ய முடியாது. வேண்டுமானால் பார்த்துக் கொண்டிருங்கள்" என்று வீரம் பேசிக் கொண்டே அந்தப் பையன் கடலில் இறங்கினான்.

கௌபீனதாரியாய், கடைசல் பிடித்த கருங்காலிச் சிலைபோலிருந்த அந்தப் பையன் கடலில் இறங்கியதும் நான் ரவியைப் பார்த்தேன். பையன் செய்த எச்சரிக்கை சரி என்று எனக்குப் பட்டது. இருந்தாலும் இந்தப் பையனுக்கு ரவி தோற்று விடுவதா என்ற வீம்பு என் புத்தியைக் கெடுத்து விட்டது. நான் அவனைத் தடுக்கவில்லை.

ரவி ஒருதரம் என் பக்கம் திரும்பிப் பார்த்தான். நான் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் என் பார்வை அவனைத் தூண்டி யிருக்க வேண்டும்.

"உனக்காச்சு, எனக்காச்சு" என்று சொல்லிக் கொண்டே அவனும் கடலில் பாய்ந்தான்.

அலைகளுடன் விளையாடிக் கொண்டே இரண்டு பேரும் கொஞ்சம் கொஞ்சமாக முன்னே போனார்கள்.

ஆரம்பத்தில் ரவி பின்னாலும் அந்தப் பையன் முன்னாலும் இருந்தார்கள். ஆனால் கொஞ்ச நேரத்துக் கெல்லாம் ரவி அவனை நெருங்கி விட்டான். அவர்கள் இருவரும் ஏதோ பேசிக் கொள்வது போலத் தோன்றியது. போட்டி உணர்ச்சி போய் அதற்குப் பதில் தோழமை உணர்ச்சி ஏற்பட்டு விட்டது என்பது அவர்களுடைய போக்கிலிருந்து புலப்பட்டது. எனக்குப் பெருமை தாங்கவில்லை.

இப்படி நெடுந்தூரம் கடலுக்குள் போய் விட்டார்கள். அவர்களுடைய தலைகள் மட்டும் அவ்வப்போது தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. அதற்கு முன் ரவி அவ்வளவு தூரம் கடலுக்குள் போனதில்லை.

திடீரென்று அலை தணிந்தபோது தலைகளைக் காணவில்லை.

நான் பரபரப்போடு அங்கும் இங்கும் ஓடினேன். அலைகள் தணிந்து தணிந்து உயர்ந்தன.

"ஐயோ, ரவி!" என்ற அலறல் என் நெஞ்சைப் பிளந்து கொண்டு வெளி வந்தது. தடாலென்று விழுந்து விட்டேன்.

மறுபடி கண் விழித்துக்கொண்டு பார்த்தபோது நான் கட்டிலின் மேல் படுத்திருந்தேன். கொஞ்சம் நன்றாக விழித்துச் சுற்றிலும் பார்த்தேன். என் கணவர் அருகில் உட்கார்ந்திருந்தார். நாலைந்து செம்படவர்கள் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்திருந்தார்கள்.

நடந்ததெல்லாம் எனக்குச் சட்டென்று நினைவுக்கு வந்தது. "ரவி திரும்பி வந்தானா!" என்று ஆவலோடு கேட்டுக் கொண்டே எழுந்து உட்கார்ந்தேன்.

எல்லோரும் மௌனமா யிருந்தார்கள்.

"ரவி வரவில்லையா! சொல்லுங்கள், அவர்கள் என்ன ஆனார்கள்!" என்று கதறினேன்.

"படுத்துக் கொள் சரோ! உனக்கு உடம்பு நேரான பின் எல்லாம் விவரமாகச் சொல்லுகிறேன். வீணாக அலட்டிக் கொள்ளாதே" என்றார் என் கணவர்.

அவர் என்னை அதட்டித் தூஷித்திருந்தால்கூட என் குற்றம் எனக்கு இவ்வளவு உரைத்திருக்காது. நான் ஆரம்பத்திலேயே தடுத்திருந்தால் இரண்டு இளம் உயிர்களைக் கடலுக்கு இரையாகாமல் காப்பாற்றியிருக்கலாம். என் மதியீனத்தினால் எத்தகைய பாதகம் நேர்ந்து விட்டது! என் நெஞ்சு வெடித்து விடும்போல் இருந்தது. தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மினேன்.

இளங்கன்றைப்போல் துள்ளித் திரிந்த ரவி இறந்து போய் விட்டான். இனி நான் அவனைப் பார்க்கப் போவதில்லை. அவனுடைய உற்சாகம் ததும்பும் குரலைக் கேட்கப் போவதில்லை. என் கையாலேயே அவனை எமனுலகுக்கு வழி அனுப்பிய பின் உயிர் வாழ எனக்குத் தகுதி ஏது! மரணம்! மரணம் ஒன்றுதான் இனி எனக்கு ஒரே ஆறுதல்.

"சரோ! குழந்தை உன்னைப் பார்க்காமல் ஏங்கிப் போயிருக்கிறான், பார். அவனைக் கொஞ்சம் சமாதானப் படுத்து. நடந்தது நடந்து விட்டது. அதற்காக இப்படி மனம் உடைந்து போகலாமா!" என்று அவர் சொல்வது கேட்டது. அவர் கை, மெதுவாக என் முகத்தைத் திருப்பிக் கண்ணீரைத் துடைத்தது. அவர் வைத்துக் கொண்டிருந்த குழந்தை என் பக்கம் தாவினான். பரவசமடைந்து அவனைக் கையில் வாங்கி மார்போடு அணைத்துக் கொண்டு பொருமினேன்.

* * *

இப்போது நான்கு வருஷங்களுக்குப் பின், ரெஸ்ட் ஹவுஸ் வராந்தாவில் தனியே உட்கார்ந்து நடந்ததை எல்லாம் நினைத்துப் பார்த்த போது என் மனத்தில் அதுவரை அடங்கியிருந்த உணர்ச்சிகள் எல்லாம் மீண்டும் பொங்கி எழுந்தன. ரவி இல்லாமல் தனியாக நான் குமரிக் கடலுக்கு வந்தது அதுதான் முதல் தடவை. அவன் இல்லாத குமரிக் கரை எனக்கு வெறுமையாகப் பட்டது.

எந்தப் பாவிக் கடல் ரவியைப் பலி கொண்டதோ, அதிலேயே, அந்த இடத்திலேயே, விழுந்து உயிரை மாய்த்துக் கொள்வதென்று நான் நிர்மாணித்து விட்டேன். என் இருதயத்தில் இருந்த அப்பாவின் உருவம், அதுவரை என்னைக் கோபமாகப் பார்த்துக் கொண்டிருந்த அப்பாவின் உருவம், நான் இந்த முடிவுக்கு வந்ததும் புன்னகையோடு அதை ஆமோதிப்பது போலத் தோன்றிற்று.

சட்டென்று எழுந்து கடிகாரத்தைப் பார்த்தேன். மணி மூன்று ஆகியிருந்தது. அவர் நாகர்கோயிலில் இருந்து திரும்பிவர இன்னும் இரண்டு மணியாகும். குழந்தை சேகர் தன் நினைவின்றித் தூங்கிக் கொண்டிருந்தான்.

"நான் போகிறேன். குழந்தையைக் கவனித்துக் கொள்ளுங்கள்" என்று மட்டும் எழுதி மேஜை மேல் அவர் கண்ணில் படும்படியாக வைத்து விட்டு மரணத்தை எதிர்கொண்டு அழைக்கப் புறப்பட்டேன்.

மணலில் நடந்த போது என் கால்கள் பின்னின. மேகங்கள் சூழ்ந்திருந்ததால் கடல்

## குட்டித் தமாஷ்!





"ஐயா ஊரிலே இல்லீங்களே!"

"வந்தவுடன் அச்சுதன் கூப்பிட்டதாகச் சொல்லு! எழுதி வைத்துக் கொள்!"

"பெயர் என்ன சொன்னீங்க!"

"அ...ச்...சு...த...ன்!"

"'அ' எப்படிங்க எழுதுகிறது!"

"..........!!!"

* * *

தவளை:—வரவர நமக்குள்ளே ஒற்றுமையே இல்லே, நல்ல மழை பெய்திருக்கே, முறை வைக்கலாம் என்று கத்த ஆரம்பித்தேன். நான் பாட்டுக்குக் கத்திண்டு இருக்கேன். ஒரு பயலானும் சேர மாட்டேங்கறான்!



* * *



"பலூன் வெடிச்ச சத்தத்திலே நீ சொன்னது காதிலே விழவில்லே. என்ன சொன்னே!"

"பலூன் வெடிக்காது, ஓசந்த பலூன் என்று சொன்னேன்."

கன்னங்கரேல் என்று பயங்கரமாகத் தோற்றமளித்தது. ஏதோ ஒரு பிரும்மாண்டமான அரக்கன், "வா, வா" என்று அட்டகாசமாகச் சிரித்துக் கொண்டு அழைப்பது போல அலைகள் ஆர்ப்பரித்தன.

ரவி என்னையும் இந்த உலகையும் விட்டுக் கடைசியாகப் பிரிந்த இடத்துக்கு வந்ததும் கொஞ்ச நேரம் கடலையே பார்த்துக் கொண்டு நின்றேன். அவன் கடலில் இறங்கத் தயாராக நிற்பது போலவும், கருங்காலிச் சிலைபோலிருந்த அந்தப் பையன் அவனைத் தடுப்பது போலவும் ஒரு தோற்றம் என் கண்களிடையே தோன்றியது.

"போகாதே, ரவி! வேண்டாம்!" என்று கத்திக் கொண்டே அந்த உருவத்தை நோக்கி வேகமாக ஓடினேன்.

"என்ன அம்மா! எதையேனும் கண்டு பயந்து விட்டீர்களா! இந்த வேளையில் தன்னந் தனியாக நீங்கள் இங்கே வரலாமா!" என்று யாரோ கேட்பது போலிருந்தது. அதுவும் பிரமைதானோ என்று எண்ணித் திரும்பிப் பார்த்தேன். என் கண்கள் ஆச்சரியத்தால் பிதுங்கிவிடும் போலாகி விட்டன.

அரையில் கோவணமும் தலையில் முண்டாகமாக ஒரு கிழவன் நின்று கொண்டிருந்தான். உப்பங் காற்றிலும் வெயிலிலும் மழையிலும் அடிபட்டு அவன் கரிய உடல் நன்கு வைரம் பாய்ந்திருந்தது.

அவன் பக்கத்தில் நின்று கொண்டிருந்த பையன். அவன் யார்! ரவியுடன் போய்விட்டுக் கடலுக்கு இரையான பையன் மறுபடியும் இங்கே எப்படி வந்து சேர்ந்தான்! எல்லாமே பிரமைதானோ!

நான் அவர்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு பேச நாவெழாமல் நின்று கொண்டிருந்தபோதே அந்தக் கிழவன் மெல்ல என் அருகே வந்தான். "நீங்களா, அம்மா! சௌக்கியமாய் இருக்கிறீர்களா! ஐயா வரவில்லையா!" என்று சொந்தக்காரன் போலப் பரிவாக விசாரித்தான்.

எனக்கு நா உலர்ந்து போயிருந்தது. "நீ யார், தெரியவில்லையே!" என்று மிகுந்த சிரமத்தோடு சொன்னேன்.

"என்னைத் தெரியவில்லையா, அம்மா! நான்தான் மரியகுசையின் பாட்டன். அதுதான், சின்ன அப்பாவோடு கடலுக்குள் போய் விட்டானே! அவன் என் பேரன்தான். இதோ நிற்கிறானே, இவன்தான் அவன் தம்பி" என்றான் கிழவன்.

அதைக் கேட்டதும், ஒரு கணம் எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அந்தக் கிழவனை நிமிர்ந்து பார்ப்பதற்குக் கூட வெட்கமாயிருந்தது.

"ஓ, அந்தப் பையனின் பாட்டனா நீங்கள்! என்மேல் உங்களுக்கெல்லாம் ரொம்பக் கோபமாய் இருக்கும். நான் மட்டும் தடுத்திருந்தால் என் தம்பியும் போயிருக்க மாட்டான். உங்கள் பேரனும் பிழைத்திருப்பான்" என்று தலை குனிந்தபடியே சொன்னேன்.

"அதென்ன அம்மா அப்படிச் சொல்லுகிறீர்கள்! ஒருவர் சாவதும் பிழைப்பதும் நம் கையிலேயா இருக்கிறது!" என்றான் கிழவன்.

"எனக்கென்னவோ, அவர்கள் இரண்டு பேரும் உயிர் இழந்தது என் பொறுப்பற்ற தனத்தினால்தான் என்று தோன்றுகிறது. நான் தடை செய்திருந்து, அதையும் மீறி அவர்கள் போயிருந்தால் அவ்வளவு தோன்றாது. அப்படிச் செய்யத் தவறிவிட்டதுதான் இந்த நாலு வருஷங்களாக என்னை வதைக்கிறது" என்று என் மனத்திலிருந்ததைக் கொட்டினேன்.

கிழவன் இன்னும் அருகில் வந்து சில வினாடிகள் என்னை உற்றுப் பார்த்தான்.

"இதோ பாருங்கள்! எனக்கு எழுபது பிராயம் போல் ஆகிவிட்டது. என் பெண்சாதி இந்தக் கடலில்தான் விழுந்து இறந்தாள். அப்புறம் என் மகன். பீட்டர் முத்துசாமி என்று சொன்னால் இந்த அலை கூட அடங்கிப் போகும்—அவ்வளவு அசகாய சூரன். அவன் என்ன ஆனான், தெரியுமா!

"கட்டுமரத்திலிருந்து கால்தவறி விழுந்தவன்தான், கடலுக்குள்ளே போய் விட்டான். நேரே பார்த்தவர்களுக்குக் கூட நம்ப முடியவில்லை, பீட்டர் முத்துசாமி இந்தக் கதிக்கு ஆளானான் என்று. அவன் போனதற்கு யார் பொறுப்பாளி! சொல்லுங்கள். இந்தக் கடல் இருக்கிறதே, இது எப்போது என்ன செய்யும் என்று சொல்லவே முடியாதம்மா! நானும்தான் காலில் நகம் முளைத்தது முதல் இதோடு பழகுகிறேன். ஆனால் எப்போது என்ன நடக்கும் என்று என்னாலேயே சொல்ல முடியாது. அது மனசு வைத்தால் ஒரு மைல் உள்ளே போனால் கூட ஒன்றுமே செய்யாது. இல்லாவிட்டால் கரையோரத்தில் நிற்பவனைக்கூடக் கவ்விக்கொண்டு போய் விடும். நன்றாய்த்தான் இருக்கிறது, நீங்கள் மனத்தை அலட்டிக் கொள்வது!" என்றான் அவன்.

கடலை அவன் அறிவும் விருப்பு வெறுப்பும் உள்ள ஒரு உயிர்ப் பிராணி போல் உருவகப் படுத்திப் பேசியது எனக்கு ரவியின் பேச்சை நினைவுப்படுத்திற்று. எனக்குத் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது.

நான் ஒன்றுமே பேசாமல் அவனுடைய ஒளி நிறைந்த கண்களைப் பார்த்துக் கொண்டு நின்றேன். இதே வார்த்தைகளை அவர் எத்தனையோ தடவை சொல்லி என்னைத் தேற்றப் பார்த்திருக்கிறார். அப்போதெல்லாம் நெஞ்சில் புரியாத அதன் பொருள், வாழ்க்கையில் அடிபட்டுத் தெளிந்த இந்தக் கிழவன் சொன்னதும் ஒளிக் கிரணம் போல வந்து என் மன இருளை அகற்றி விட்டது.

"என்ன இப்படித் திடீரென்று கிளம்பி விட்டாய்! நீ எழுதி வைத்திருந்த சீட்டைப் பார்த்ததும் என்னவோ ஏதோ என்று பதறிப் போய் விட்டேன். உன்னை மறுபடியும் பார்க்கும் வரை என் மனம் என்ன பாடுபட்டு விட்டது, தெரியுமா!" என்று படபடப்போடு சொல்லிக் கொண்டே என் கணவர் ஓடி வந்தார்.

என் கண்களில் நீர் நிறைந்தன.

"நீங்கள் வர நாழியாகு மென்று நினைத்தேன். கொஞ்சம் காற்றாட உலாவினால் இதமாயிருக்கு மென்று தோன்றியது. அதனால்தான் சீட்டு எழுதி வைத்து விட்டு ஓடிவந்தேன்" என்றேன்.

குமரிக் கடல் 'மடார்' 'மடார்' என்று அலைக் கைகளைக் கொட்டிச் சிரித்தது.

சூரியன் மேகக் கூட்டத்தின் ஒரு இடுக்கு வழியாக எட்டிப் பார்த்தான்.



Erasmic
PERFUMED
COCONUT
HAIR OIL
கூந்தலுக்கு இராஸ்மிக்
பரிமள தேங்காயெண்ணெய்
ECH. 1-50 TM




தெருவிலே வெய்யில் பளீரென்று ஒளி வீசிக் கொண்டிருந்தது. வீதியிலே ஜன நடமாட்டத்தையே காணவில்லை.

எதிர்வீட்டு ஜன்னலோரம் உட்கார்ந்து பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்த பெண்ணின் குரல் மட்டும், சூழ்ந்திருந்த அமைதியினூடே தெளிவாக ஒலித்தது.

இம்மாதிரித் தானும் பரீட்சைக்குப் படித்த நாட்கள் விமலாவின் நினைவுக்கு வந்தன.

எஸ். எஸ். எல். ஸி. தேர்ச்சி பெறும் வரையில் மதுரையிலிருந்த தன் அக்கா வீட்டில்தான் அவள் இருந்து வந்தாள். அக்காவின் கணவருக்கு அங்கே கலெக்டராபீஸில் வேலை. விமலாவின் அதிர்ஷ்டம், அவள் படிப்பு முடியும் வரையில் அவளுக்கு மதுரையே நிரந்தரமான இடமாக அமைந்து விட்டது.

அக்கா வீட்டிலே கழிந்த நாட்களின் இனிமை, இப்போது நினைத்துப் பார்க்கும் போதும் அவள் நெஞ்சிலே குளிர்ந்தது. அதிலும் கடைசி மூன்று மாதங்கள்.......!

விமலாவின் பார்வை எதிர்ப்புறம் ஓடியது. எதிர்வீட்டு மாடியில் சற்றுமுன் வெகு அக்கறையுடன் படித்துக் கொண்டிருந்த பெண், புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, ஜன்னல் கம்பிகளைப் பிடித்தவாறு, இவளைப் போலவே தெருவைப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

விமலாவின் கண்முன் தோன்றிய இந்தச் சுற்றுப்புறம் மங்கி மறைந்து, மனவெளியில் அவள் மதுரையில் கழித்த அந்தக் கடைசி மூன்று மாத வாழ்க்கை எழுந்து நின்றது.

இப்படித்தான் ஒருநாள்.

அக்கா வீட்டு மாடியில் ஜன்னலோரம் நின்று வீதியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். யாரோ அழகாகப் பாடும் ஒலி மெதுவாகக் கேட்டது. 'யார் பாடுகிறார்கள்!' என்ற நினைப்பில் அவள் பார்வையைச் சுழற்றுகையில் எதிர் வீட்டு பால்கனியில் நின்று தலை வாரிக் கொண்டிருந்த இளைஞன் அவள் விழிக் கோணத்தில் விழுந்து விட்டான்.

'யாரோ புதிதாகக் குடி வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது!' என்று நினைத்துக் கொண்டாள் விமலா.

ஏதோ ஒரு பாட்டின் அடியைத் திரும்பத் திரும்ப முனகியவாறே தலைவாரிக் கொண்டிருந்த அவன், கண்ணாடியையும் சீப்பையும் கொண்டுபோய் உள்ளே வைத்துவிட்டு வந்து பால்கனிச் சுவர்மீது முழங்கைகளை ஊன்றிக் கொண்டு நின்றான்.

அழகாகப் படியப் படிய வாரிவிடப் பட்டிருந்த அவனது கேசத்தை மாலை நேரத்தின் இனிய தென்றல் வருடி வருடி இலேசாகக் கலைத்து விளையாடியது.

"அவன் யார்!"—ஏனோ அவனைப் பார்த்த உடனேயே அவனைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்கிற உணர்வு அவள் உள்ளத்தில் தலை நீட்டியது.

"யாராயிருந்தால் எனக்கென்ன!" என்று தன் மனத்திடம் சொல்லிக் கொண்டே பார்வையை வீதிப்புறமாக ஓடவிட முயன்றாள். தெருவிலே மாலைப் பொழுதின் மஞ்சள் ஒளி கோலமிட்டது. ஒரு வீட்டின் வாசலில் சிறுமிகள் ஏதோ பாடிக் கொண்டே பாண்டி விளையாடிக் கொண்டிருந்தனர்.

"ஓ......ஓ...... தப் பாக்கி! போலீஸ்காரன் பெண்டாட்டி!..." விளையாடிக் கொண்டிருந்த சிறுமி தனக்கே உரிய ராகத்துடன் இந்த வார்த்தைகளை உச்சரிக்கையில் எதிர் வீட்டு இளைஞனுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

அவனது சிரிப்பொலி மந்திரக் கயிறாகி அவள் பார்வையைத் திருப்பியதும், அவளிடம் சொல்லிக் கொள்ளாமலேயே அவள் முகத்தில் அழகாகப் புன்னகை மலர்ந்தது.

சிரித்துக் கொண்டிருந்த இளைஞன் அவள் புன்னகையை ரஸித்துக் கொண்டிருந்தான். அவள் முகத்தில் நாணம் நிறம் பூசவே, சொல்ல இயலாத வெட்கப் பூரிப்புடன் உள்ளே ஓடிப் போய்க் கட்டிலில் உட்கார்ந்து கொண்டாள்.

அறையினுள்ளும் அவளெதிரே அந்த அழகிய முகம், அவளுக்கு,—அவள் நெஞ்சிலே விழித்த கண்களுக்கு,—தெரிந்தது.

'நல்ல வாளிப்பான உருவம். குறும்பு விழிகள். குழந்தைச் சிரிப்பு! கர்வம் மிதக்கும் பொலிவு!—நான் ஏன் அவனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறேன்! அவன் யாரோ! நான் யாரோ!'—

மனத்தின் இரு தரப்புகளும் தமக்குள் வீணே தர்க்கித்துக் கொண்டாலும், அந்த முகமும் சிரிப்பும் அவள் நெஞ்சிலே அழியாது பதிந்து விட்டன.

வீட்டு வேலையில்லாத வேளையில், பள்ளிக்கூடம் விட்டு வந்ததும் ஓய்ந்த நேரத்திலெல்லாம் அவன் நினைவில் அவள் சிரித்தாள். மனத்தினுள் அவளும் அந்த மானசீகக் காட்சியை ரஸிக்கத்தான் செய்தாள்.

சூரியன் மலைவாயில் நெருங்கும் வேளையில் அவள் தினமும் மாடி வராந்தாவுக்கு வந்து

கைப்பிடிச் சுவர் மீது சாய்ந்து கொண்டு ஓவியமாக நிற்பான். கண்கள் வீதியில் வட்டமிட்டுக் கொண்டிருந்தாலும் நெஞ்சம் மட்டும் எங்கேயோ சுற்றித் திரிந்து எதற்காகவோ ஏங்கும். முடிவில், ஒளியும் இருளும் இணைகிற போதிலோ அல்லது அதற்குச் சற்று முன்போ, எதிர் வீட்டுப் பால்கனிக் கதவு திறக்கும். அங்கே அவன் வந்து நிற்பான்: ஆஜானுபாகுவாய், அழகனாய்!

யாரைப் பார்க்க வேண்டும் என்கிற அந்தரங்கத் துடிப்பில் அவள் இத்தனை நேரமாக அங்கே தவமிருந்தாளோ, அவன் தரிசனம் கிடைத்த போது அவளுக்கு நிலை கொள்ளாது. அங்கே நின்று கொண்டே இருப்பதைத்தான் அவள் நெஞ்சம் விரும்பும். ஆனால் அங்கமெல்லாம் கூசிக் குலையும். அவன் முகத்தைப் பார்த்துவிட்ட மனத் திருப்தியில், அந்தக் காட்சியை நெஞ்சிலே பதித்துக் கொண்டு விட்ட பரவசத்தில் உள்ளே ஓடிப் போய் விடுவாள். அப்புறம் நன்றாக இருள் பரவும் வரையில் அந்த அறையின் ஏகாந்தத்தில் என்னதான் சிந்தனை செய்வாளோ, அவளுக்கே தெரியாது.

ஆனால் ஒன்று. தனிமையில் அவள் தன் இதயத்துடன் நடத்திய இந்தச் சம்பாஷணை அந்த எதிர்வீட்டு இளைஞனை அவள் உத்தரவின்றியே அவள் மனவீட்டில் குடியேற்றிவிட்டது.

'அவன் யார்!' என்ற கேள்வி அதன்பின் அவள் மனத்தில் எழவேயில்லை. 'அவசியமில்லை' என்ற நினைப்போ என்னவோ! தினம் அவனைப் பார்க்காமல் இருப்பது என்பது அவளுக்குக் கஷ்டமாகி விட்டது. அவன் அவளைப் பற்றி என்ன நினைத்தானோ! அது அவளுக்குத் தெரியாது. அவள் மட்டும் தினமுமே, அந்தியின் மனமோகனக் கிறக்கத்தில் அவனது மலர்ந்த முகதரிசனம் கிடைத்த பின்தான் மாடியிலிருந்து வீட்டிலே விளக்கேற்றக் கீழே இறங்கி வருவாள்.

அவன் அவளைப் பற்றி அதிகமாக அக்கறை கொண்டானோ, இல்லையோ! அவளைப் பார்க்க அவனும் ஒருநாள் கூடத் தவறியதில்லை.

"நான்தான் தினமும் இதே வேளையில் மாடிக்கு வருகிறேன். அவரும் ஏன் ஒருநாள் தவறாது இந்த வேளையில் பால்கனிக்கு வர வேண்டும்!" என்று அவள் சிந்திப்பாள்.

"அவருக்கு என் மீது.........''—சிந்தனைகள் இப்படி அரை குறையாக வளர்கையிலேயே, அவர்கள் உறவு அர்த்தமுள்ள பார்வைப் பரிமாறல் பருவம் கடக்கு



முன்பே, அவளுக்குப் பரீட்சைகள் முடிந்து விட்டன. விடுமுறைக்கு எப்போதும் ஊருக்குப் போய்விடத் துடிக்கும் அவள் அந்த வருடம் ஏனோ அதைப் பற்றிய பேச்சையே எடுக்காமல் இருந்தாள்.

அந்த வாரத்தில்தான் அவளுக்கு அவனைப் பற்றிய சில தகவல்கள் தெரிந்திருந்தன. அவன் பி. ஏ. படித்துக் கொண்டிருந்தான். எதிர் வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்திருப்பவர் அவனுக்குச் சிற்றப்பாவாம். பேச்சுவாக்கில் அகஸ்மாத்தாக அவள் தோழியொருத்தி இந்தச் செய்திகளை அவள் காதில் போட்டு வைத்தாள்.

"அவர் பெயர் என்ன தெரியுமாடி!" என்று தான் கேட்க நினைத்தாள் விமலா. ஆனால் 'இதைப் போய் எப்படிக் கேட்பது!' என்ற வினாவில் அந்த நினைப்பு ஒடுங்கிவிட்டது.

இதற்குமேல் அவனைப் பற்றித் தெரிந்து கொள்ள அவளுக்குச் சந்தர்ப்பமே ஏற்படவில்லை. அந்த வாரமே அவள் அக்காவின் கணவருக்கு மதுரையிலிருந்து மாற்றலாகி விட்டது.

அதன்பின்—அதன் விளைவாய், அங்கிருந்து புறப்பட்டு அவள் தன் அப்பா—அம்மாவிடம் வந்து சேர்ந்தாள்.

அப்புறம்.........

"விமலா! விமலா!"

கீழேயிருந்து வந்த அவள் அப்பாவின் குரல் அவள் நினைவுகளைத் துண்டித்து விட்டது. அவளும் நினைவுலகிலிருந்து நனவுலகில் இறங்கினாள். வெளியே வெய்யில் சற்றுத் தணிந்திருந்தது. எதிர்வீட்டு மாடியில் நின்றுகொண்டிருந்த பெண் எப்போதோ உள்ளே போய் விட்டிருந்தாள்.

'எவ்வளவு நேரமாக இப்படியே நின்று கொண்டிருக்கிறேன்!' என்று நினைத்துக் கொண்டே கீழிறங்கி வந்தாள் விமலா.

"சுந்தர வாத்தியார் வந்திருந்தாரம்மா! வியாழக்கிழமை தோறும் நீ விரதமிருந்தால் நல்லதுன்னு சொன்னார்! வியாழன்தோறும் ஈசுவரன் கோயிலுக்குப் போய் தட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனை பண்ணி நமஸ்காரம் பண்ணிவிட்டு வா. அவன் கண் பார்த்துத்தான் உன் கழுத்தில் திருமாங்கல்யம் ஏறணும்" என்று ஆதுரத்துடன் கூறினார் அவள் அப்பா.

"சரி அப்பா!" என்று சொல்லிவிட்டு முகம் அலம்பிக் கொள்ள உள்ளே போனாள் அவள். அப்பாவின் வருத்தம் தோய்ந்த முகத்தைப் பார்க்கும்போது அவளுக்கும் வேதனையாகத்தான் இருந்தது. ஒரு நாளா! இரண்டு நாளா! அவளுக்கு வரன் தேடித் தேடி அவரும் இந்த நாலு வருஷங்களாக எங்கெல்லாமோ அலைந்து விட்டார். ஏனோ ஒரு இடமும் அவருக்கு அமையவில்லை.

அவள் மதுரையிலிருந்து வந்து சில நாட்களுக்கெல்லாமே, அவனது பரீட்சை முடிவுகள் வெளியானதுமே அவள் அப்பா வரன் வேட்டையில் இறங்கி விட்டார்.

சோப்பைக் குழைத்து முகத்தில் பூசிக் கொள்ளும்போது முதன் முதலாக அவள் வாழ்வில் நிகழ்ந்த பெண் பார்க்கும் படலத்தின் நினைவுகள் அவள் மனத்தில் ஊர்ந்தன.

இப்போது நடந்தாற் போல அவளுக்கு நன்றாக நினைவிருக்கிறது.

திருச்சியிலிருந்து பிள்ளை வீட்டார் அன்று வருவதாக இருந்தது.

காலை பத்து மணிக்கே பஸ் ஸ்டாண்டுக்குப் போய் அவர்களை வரவேற்கக் காத்திருந்து விட்டுக் கடைசியில் பன்னிரண்டு மணிக்கு ஏமாற்றத்துடன் வீடு திரும்பினார் அவளுடைய தந்தை.

"இனிமேல் வந்தால் மூணு மணி பஸ்ஸுக்குத்தான் வரணும். முதன் முதலாகப் பெண் பார்க்க வருகிறவாளைக் கொழுத்த ராகு காலத் திலா அழைத்துக் கொண்டு வருவது!" என்று முணுமுணுத்துக் கொண்டுதான் மறுபடியும் அவர் பஸ் ஸ்டாண்டுக்குப் போனார்.

இங்கே வீட்டில் முணுமுணுத்ததோடு நிற்கக் கூடாதோ! பஸ்ஸிலிருந்து அவர்கள் இறங்கியதுமே அவர்களிடமும் இதையே சொல்லி யிருக்கிறார். அதோடு நின்றாலும் பரவாயில்லையே!

"ராகு காலம் முடிகிற வரைக்கும் இங்கே என் சிநேகிதர் ஒருத்தர் வீட்டிலே தங்கியிருந்து விட்டு காலரை மணிக்கு மேலே நம் வீட்டுக்குப் போவோமே!" என்று சொல்லி யிருக்கிறார். அவர்களுக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை.

"ராகு காலமெல்லாம் புறப்படும் போது பார்த்தால் சரிதான். இப்போ என்ன வந்தது!" என்று சொல்லிக் கொண்டே அவர்கள் நேராக பஸ் ஸ்டாண்டிலிருந்து விமலாவின் வீட்டுக்கே வந்து விட்டார்கள்.

ராகு காலத்தில் அவர்கள் பெண் பார்க்க வந்ததில் விமலாவின் அப்பாவுக்கு வருத்தம். வந்து இறங்கியதுமே அவர் அபசகுனம் போலத் தடங்கல் சொன்னதில் அவர்களுக்கு மனஸ்தாபம். எப்படியோ அந்த வரன், பெண் பார்க்கும் படலத்துடனேயே தட்டிப் போய் விட்டது.

அதன் பின் எத்தனையோ பெண் பார்க்கும் படலங்கள். ஒன்றுமே பயன் படவில்லையே, ஏன்......!

கோவிலுக்குப் போகும் வழியிலெல்லாம் அவளுக்கு இந்தச் சென்ற கால நினைவுகள் தான். இடை இடையே மழை இருட்டில் பளிச்சிடும் மின்னொளியைப் போல, மதுரையில் பார்த்த, அக்கா வீட்டுக்கு எதிர் வீட்டு இளைஞனின் சிரித்த முகம் மங்கலாக அவள் முன் தோன்றி மறையும். ஏனோ இத்தனை வருஷங்களாகியும் அந்த முகத்தை அவளால் மறக்க முடியவில்லை.

அந்த இளைஞன் யாரோ! அவன் இப்போது எங்கே வாழ்கிறானோ! பெயர்கூடத் தெரியாத அவன் உரு அவள் நெஞ்சிலே ஏன் இப்படி கந்தா விளக்காகச் சுடர்விடுகிறது! இந்த 'ஏனு'க்கு அவளால் விடை காண முடியவில்லையே!

கோவிலிலே அர்ச்சனை முடிந்து தீபாராதனை ஆகும் போது அவள் மனமுருகி வேண்டிக் கொண்டாள் :-



"சுவாமி, பகவானே! இத்தனை நாள் அப்பாவை அலைய வைத்ததுதான் வைத்தாய்! கூடிய சீக்கிரம் எனக்கும் அந்த மதுரை இளைஞனுக்குமே திருமணம் செய்து வை. எங்கே யிருந்தாலும் அவரைக் கூட்டிக் கொண்டு வந்து விடு!"— மனிதர்களிடம் வெளியிட முடியாத சில எண்ணங்களைத் தெய்வத்திடம் தானே சொல்லி ஆற்றிக் கொள்வதற்கு முடியும்!

'இது என்ன சபலம்!' என்று அவளுள் இரண்டாகப் பிரிந்து விட்ட அவள் மனமே, ஒன்று மற்றொன்றைப் பார்த்துக் கேட்கும்.

'தெய்வம் நினைத்தால் எதுதான் நடக்காது!'

இந்தச் சமாதானத் தெம்பில் அர்ச்சகர் கொடுத்த அர்ச்சனைப் பிரசாதத்தை பயபக்தியுடன் கண்களில் ஒற்றி யெடுத்துக் கொண்டு திரும்பினாள் அவள்.

தெய்வ சந்நிதானத்தில் தன் அந்தரங்கத்தை யெல்லாம் கூறி நெஞ்சப் பளுவை இறக்கி வைத்துவிட்டுத் தெய்வத்தின் ஆசியைச்சுமந்து கொண்டு அவளிடம் வரும் அர்ச்சனைக் குங்குமத்தை, அவள் தன் நெற்றியில் இட்டுக் கொள்ளும் போது ஏற்படும் பரவசம் அவளுக்கு ஏதோ நம்பிக்கை யளித்தது.

தெய்வம் அருள்புரிக்குதானோ என்னவோ!

நீண்டகால இடை வெளிக்குப்பின் ஒருநாள். அவளை யாரோ பட்டணத்திலிருந்து பெண் பார்க்க வரப்போகும் சந்தோஷச் செய்தியை அவளிடம் தெரிவித்தார் அவள் அப்பா. பையன் அக்கௌண்டன்ட் ஜெனரல் ஆபீஸில் உத்தியோகம் பார்க்கிறானும். ஜாதகங்கள் அற்புதமாகப் பொருந்தியிருந்தனவாம்.

அப்பாவின் குரலிலும் தோற்றத்திலும் நெடுநாட்களுக்குப் பிறகு தென்படும் குதூகலம் அவளுக்கு எவ்வளவோ மகிழ்ச்சி யளித்தாலும் அவள் மனத்தின் ஒரு மூலையில் ஏதோ நிறைவேற்றப்பட முடியாத குறையொன்று முடங்கிக் கிடந்தது.

"வேளை வந்து விட்டால் எல்லாம் தானாக நடந்து விடும்!" என்று பெரியார்கள் சொல்வது போலக் காரியங்கள் நடந்து விட்டன.

பெண் பார்க்கும் படலம் முடிந்தது. பையனுக்கும் அவன் வீட்டார் எல்லோருக்குமே விமலாவைப் பிடித்து விட்டது. முகூர்த்த நாள் குறித்து நிச்சயதார்த்தம் சம்பிரதாய பூர்வமாகச் செய்ய வேண்டியதுதான் பாக்கி. வரதட்சிணை விவகாரங்கள் கூடப் பேசி முடிவு செய்து கொண்டு விட்டார்கள்.

சொப்பனம் போல் நிகழ்ந்து விட்டதை யெல்லாம் நினைத்துப் பார்க்கும்போது விமலாவுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. ஆயினும் அர்த்தமற்ற ஏதோ ஏமாற்றம் அவ

னுடைய இதயத்தின் ஒரு ஓரத்தில் வேதனை கொடுக்கத்தான் செய்தது.

இப்போது அவளைப் பெண் பார்க்க வந்திருந்த யுவனின் முகத்தையும் அவளது மானசீக வெளியில் எப்போதும் தோன்றிச் சிரிக்கும் மதுரை இளைஞனின் முகத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தாள். இவனும் அழகாகத்தான் இருந்தான். சொல்லப் போனால், அவனைவிட இவன் இன்னும் நல்ல நிறம்கூட. ஆயினும் அந்த முகத்திலே ஒளி வீசியதாக அவள் நினைத்த அந்தக் கவர்ச்சி இவன் முகத்தில் எங்கே இருக்கிறது!

"எங்கோ எப்போதோ பார்த்த ஒரு இளைஞனைப் பற்றி நான் ஏன் இப்படி நினைத்துக் கொண்டிருக்கிறேன்!" ஆயிரம் சமாதானங்கள் கூறிக்கொண்ட போதிலும் அந்த நினைவை ஒதுக்கிவிட முடியவில்லையே!

மனத்திலே ஏதேதோ சிந்தனைகள் ஓடிக் கொண்டிருந்தாலும் அன்று கோவிலில் அவள் இப்படித்தான் வேண்டிக் கொண்டாள்.

"இந்த இடமாவது எந்தத் தடங்கலுமில்லாமல் நிச்சயமாகி நடக்கும்படி அருள் புரி, அப்பா!"

ஆனால்......

கோவிலிலிருந்து வீடு திரும்பியவள், அங்கே நடந்து கொண்டிருந்த அமளியைப் பார்த்த போது, 'இந்தப் பிரார்த்தனையும் வீணாகி விடுமோ!' என்ற கலக்கம்தான் அவளுக்கு ஏற்பட்டது.

நிச்சயதார்த்தத்தை முன்னிட்டு வந்திருந்த, குடும்பத்திலேயே பெரியவரான அவளுடைய பெரியப்பா பிரமாதமாக இரைந்து கொண்டிருந்தார்.

"இது ஆயிரம் காலத்து விஷயம்டா! நன்னாத் தீர விசாரிக்கத்தான் செய்யணும். என்ன காரணத்தினாலே மூத்தவனுக்குக் கலியாணமாகாமலிருக்கும் போது இளையவனுக்குப் பெண் பார்க்கணும்! அதுதான் போகட்டும். மூத்தவன் ஒருவன் கலியாணமாகாமல் இருக்கிறான் என்ற விவரத்தையாவது உன்னிடம் சொன்னார்களா! குடும்பத்தில் என்ன தகராறோ! அல்லது மூத்தவனுக்கு ஏதும் தீராத வியாதியோ! நீ ஒன்றுமே விசாரிக்காமல் அவசரப்பட்டு எதையாவது செய்து வைக்காதே! நான் போய் விசாரித்துக் கொண்டு வருகிறேன்."

பெரியப்பாவின் பேச்சுக்கு எதிர்ப் பேச்சுப் பேச அங்கே யாருக்குமே சக்தியில்லை. 'இதென்ன விபரீதம்!' என்று நினைத்தாள் விமலா. "வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்தாற்போல, எவ்வளவோ சிரமங்களுக்குப் பிறகு, 'இந்த ஒரு இடமாவது அமைகிறதே' என்று சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தேன். அதற்கும் தடங்கல் செய்யத் தன் அண்ணா வந்து சேர்ந்தாரா!" என்று வேதனைப் பட்டார் அவள் அப்பா.

பெரியப்பா எதற்கும் மசிந்து கொடுக்காதவர். அவர் நினைத்தால் நினைத்ததுதான். அவர் பேச்சுக்கு எதிராகப் பேசிய பிறகு அவருடைய உறவே நீடிப்பது கஷ்டம். இதெல்லாம் வீட்டிலே எல்லோருக்கும் தெரியுமாதலால்

அவருடைய முயற்சிகளுக்குத் தடையாக யாருமே நிற்கவில்லை.

பிள்ளை வீட்டாரை நேரில் சந்தித்து, மூத்த பையனைப் பற்றிய விவரங்களையெல்லாம் தெள்ளத் தெளியத் தெரிந்து கொண்டுவர அவள் பெரியப்பா புறப்பட்டுப் போய் விட்டார்.

விமலாவின் அப்பாவுக்கு எதையோ பறி கொடுத்தாற்போல் இருந்தது. வீட்டிலேயே ஒரு சோகக் களை குடி புகுந்து கொண்டது. 'தன் ஒருத்தியின் வாழ்க்கைப் பிரச்னை குடும்பத்துக்கு எவ்வளவு பெரிய கவலையாகப் போய் விட்டது' என்பதை நினைத்து அவள் மிகவும் வேதனைப் பட்டாள்.

பெரியப்பா புறப்பட்டுப் போயும் ஒரு வாரம் ஆகிவிட்டது. எந்த விவரமும் தெரியவில்லை.

இந்த இடமும் கைவிட்டுப் போனதென்றால்... அப்புறம் அப்பா தான் என்ன செய்வார்! பணச் செலவுதான் எவ்வளவு!. விமலாவின் மனத்தை அரித்துக் கொண்டிருந்த மதுரை இளைஞனைப் பற்றிய சபலமெல்லாம் பொடிந்து போய் விட்டது. இப்பொழுது அவள் பிரார்த்தனையெல்லாம், 'இந்த இடமாவது முடிய வேண்டுமே!' என்பதுதான். நாட்கள் ஓடுகின்ற வேகத்தில் அப்பாவின் கொடிந்து போன மனத்தை நினைத்துப் பார்க்கும்போது அவளுக்குத் தானே தனக்குப் பாரமாக இருப்பது போலத் தோன்றியது.

எப்போதும் போல மாடி வராந்தாவில் உட்கார்ந்து கொண்டு திக்குத் திசையில்லாது பறக்கும் எண்ண அலைகளில் அவள் மிதந்து கொண்டிருந்த போது வீட்டு வாசலில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது.

சிந்தனைகளை உதறி விட்டு வாயிற்புறம் நோக்கினாள் விமலா. காரிலிருந்து பெரியப்பா தான் இறங்கிக் கொண்டிருந்தார். அவள் நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. 'நல்ல செய்தியாகக் கொண்டு வரவேண்டுமே, பகவானே!' என்று திரும்பத் திரும்ப அவள் மனசு வேண்டிக் கொண்டது.

பெரியப்பாவின் முகம் மலர்ச்சியுடன் விளங்குவதை அவள் கவனித்தாள். அவருக்குப் பின்னால் காரிலிருந்து இன்னும் யாரோ இறங்கி வந்தார்கள்.

'யார் அது?' என்று அவள் நினைக்கும்போது, தற்செயலாகத் தலையை நிமிர்த்தியது அந்த இளைஞனின் முகம்!

அவள் மெல்லிய புன்னகை பூத்தவாறே தலையைக் குனிந்து கொண்டு வீட்டினுள் நுழைந்தாள். அவளுக்கு உடம்பெல்லாம் ஏனோ புல்லரித்தது. சொல்ல இயலாத மகிழ்ச்சியில் அவள் உடம்பு நடுங்கிற்று.

'பெரியப்பா இவரை எங்கிருந்து தேடி அழைத்து வந்தார்?' இந்தக் கேள்வி அவள் மனத்தில் எழும்போது "விமலா!" என்று அழைப்பு வந்து விட்டது.

இறங்கிப் போய் 'டிரஸ்' மாற்றிக் கொள்ளும்போது, பக்கத்து அறையில் அப்பாவிடம் பெரியப்பா பேசிக் கொண்டிருந்தது அவள் காதுகளில் தெளிவாக விழுந்தது.







"இவன்தான் அந்த வீட்டுக்கு மூத்த பையன். என்னமோ 'கலியாணமே வேண்டாம்' அப்படின்னு சொல்லிக்கொண்டு இருந்தானாம். இளையவனுக்கும் வயசாகி விடவே, இவன் கலியாணத்தை முதலில் முடித்து விடத் துடியாய் இருந்திருக்கிறார்கள். பையன் ஒரு அபூர்வப் பிருகிருதி! 'எனக்காகத் தோன்றியபோது நான் சொல்லுகிறேன்! அப்போது என் கலியாணத்தைப் பற்றிக் கவலைப் பட்டால் போதும்!' என்று கறாராகச் சொல்லி விட்டானாம். 'இளையவன் மதுரையிலே தனியாக இருக்க வேண்டி ஏற்பட்டது. ஹோட்டல் சாப்பாடு அவனுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. துணைக்குப் போவதற்கு ஆகுமான மனுஷாள் வீட்டில் இல்லை. ஆகவே மூத்தவன் பிரம்மச்சாரியாக இருக்கும்போதே இளையவனுக்குக் கலியாணம் பண்ணி வைப்பது அவசியமாகி விட்டது!'' என்றுதான் அவன் பெற்றோர்கள் சொன்னார்கள். எனக்கு என்னமோ இதெல்லாம் சரியான காரணமாகத் தெரியவில்லை. 'மூத்தவன் எங்கே இருக்கிறான்?' என்று கேட்டேன். 'மதுரையிலே காலேஜ் லெக்சரராக இருக்கிறான்!' என்று சொன்னார்கள். மதுரைக்குப் போனேன். இவனைப் பார்த்தேன். 'மூத்தவன் கலியாணமாகாமல் இருக்கும்போதே இளையவனுக்குப் பெண்ணைக் கொடுப்பது அவ்வளவு உசிதமில்லை' என்பதைச் சொல்லி, இவன் மனசையே மாற்றி விட்டேன். நான் சொன்ன முறையிலேதான் அவன் மனசு மாறியதோ, அல்லது தெய்வமே தான் அவன் மனசை மாற்றியதோ! 'நீ வந்து பெண்ணைப் பார். பிடித்திருந்தால் 'தம்பிக்கு' என்று நிச்சயமான முகூர்த்தத்திலே உங்கள் கலியாணத்தை நடத்தி விடுவோம்! வரபோது உங்க அப்பாவிடம் உன் ஜாதகத்தைக் கேட்டு வாங்கி எதற்கும் பொருத்தம் பார்த்துக் கொண்டுதான் வந்தேன். ஜாதகங்கள் பேஷாகப் பொருந்தியுள்ளன!' என்று சொல்லிக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறேன். அவனும் எப்படியோ சம்மதித்து வந்திருக்கிறான்!"



"விரலில் என்ன காயம்?"

"ஒரு கல்யாணத்துக்குச் சாப்பிடப் போனேன். ரொம்பச் சின்ன மாவடுவாகப் போட்டார்கள். மாவடு தப்பித்துக் கொண்டது; விரலைக் கடித்துக் கொண்டு விட்டேன்."

பெரியப்பா மடமடவென்று கூறிய விஷயங்கள் அவள் மனத்தில் மறுபடியும் கலவரத்தை உண்டு பண்ணின.

"தெய்வமே! கிட்டாத கனியைக் கிட்ட வைப்பதுபோல் ஆசை காட்டி, அதையும் தட்டிப் பறித்து விடாதே!" என்று விநாடிக்கொரு முறை வேண்டிக் கொண்டாள் அவள்.

அவனை நமஸ்காரம் செய்துவிட்டு எழுந்த போது அவள் கண்கள் பேசிய பாஷையை அவன் புரிந்து கொண்டானோ, இல்லையோ—அழகாக அன்றுபோலப் புன்னகை செய்தான்.

"என்னைத் தெரிகிறதா, யாரென்று!" என்று கேட்டன அவள் கண்கள்.

அவன் புன்னகை 'தெரிகிறதே!' என்று பதில் கூறிற்று.

அதற்கு அர்த்தம் இதுதானா!

வந்து சில நேரத்திலெல்லாம் அந்த இளைஞன் புறப்பட்டு விட்டான். பெரியப்பாவும் வழியனுப்புவதற்காகக் கூடப் போனார்.

"அவர் என்ன சொன்னாரோ!"

"என்ன சொல்லி யிருப்பார்...!"

விமலாவுக்கு வீட்டிலே இருக்கை கொள்ளவில்லை. 'தன்னிலே மூழ்கி மோனத் தவமியற்றும் ஆண்டவனின் திருக் கோலத்தைத் தரிசனம் செய்தாவது இந்த மனக் குழப்பங்களிலிருந்து சற்று விடுபடலாம்' என்ற நினைப்பில் பூக் கூடையைக் கையிலெடுத்துக் கொண்டு கோயிலுக்குப் புறப்பட்டாள்.

வாசற்படியருகே போகும்போதே எதிரே மலர்ந்த முகத்துடன் பெரியப்பா வந்தார்.

"உன்னை மதுரையிலேயே பார்த்திருக்கிறானாமே அவன்! உன் அக்கா வீட்டுக்கு எதிர் வீட்டில்தான் இருந்தானாம்! 'அந்தப் பெண்ணுடைய அத்திம்பேர் கலெக்டராபீஸிலே வேலையாக இருந்தார். அவர்கள் வீட்டில்தான் இந்தப் பெண் ரொம்ப நாள் வளர்ந்தாள் என்றெல்லாம் நீங்கள் சொன்னபோதே எனக்குச் சந்தேகம்தான். நேரில் பார்த்ததும் சந்தேகம் தெளிந்து விட்டது! அவளேதான்!' என்று சொன்னான். 'கலியாணமே வேண்டாம்' என்று சொன்னவன் 'சம்மதம்' தெரிவித்து விட்டானே! பலே!'' என்று தமக்கே உரிய பாணியில் பெரியப்பா பேசிக்கொண்டு போன போது அவள் இதயத்தில் அமுதம் வார்ப்பது போலிருந்தது.

"பேசாமல் பேசி அவனைச் சம்மதிக்க வச்சுட்டாயே!" என்று பெரியப்பா அவளைக் கேலி செய்தார்.

அந்தரங்க பக்தியுடன் அவள் அர்ச்சித்த மலர்கள் சூழ் வீற்றிருந்த தட்சிணாமூர்த்தியின் உருவம்தான் அப்போது அவள் மனத்தில் தெரிந்தது.

'நான் செய்த பூஜாபலன்' என்று அவள் இதயம் பாடியது.

# வட்ட மேஜை

## உயரிய பண்பு

எவ்வளவோ பேர்கள் தட்சிணப் பிரதேசத் திட்டத்தைத் தாக்கிப் பேசியும், கண்டித்து எழுதியும், தனித் தமிழ் நாட்டின் அவசியத்தை வற்புறுத்தியும் வருகிற இந்தச் சமயத்தில்,

"தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா"

என்று கூறி வரும் 'கல்கி', தமிழ் மொழியின் வளர்ச்சியில் கருத்துக் கொண்டிருக்கும் 'கல்கி', நாட்டின் ஒற்றுமையை எண்ணத்தில் கொண்டு மொழிவாரி அடிப்படையில் தனித்தமிழ் ராஜ்யம் அமைப்பதை விடத் தட்சிணப் பிரதேசம் தான் சிறந்தது என்று தன் இதழ்களில் தலையங்கம் தாங்கி வருவதைக் காண மட்டற்ற மகிழ்ச்சி யடைகிறோம்.

அளவிலாத அன்பும், பக்தியும் கன்னித் தமிழினிடம் 'கல்கி'க்கு இருந்த போதிலும், பாரதத் தாயின் மேனி சிதைவுறாமல் தடுக்க விரும்பி மீண்டும், மீண்டும் தட்சிணப் பிரதேச நலனை வற்புறுத்தி எழுதி வருவதை மற்றவர்களுக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

"யாதும் ஊரே ; யாவரும் கேளிர்" என்று வாழ்ந்து வரும் தமிழராகிய நாம் நம்மைப் பற்றிக் கொண்டிருக்கும், தனித் தமிழ் நாட்டு மோகத்தை விடுத்து, ராஜாஜி அவர்களின் தீர்க்க தரிசனத்தை உணர்ந்து, தட்சிணப் பிரதேசம் அமைப்பதில் மற்றவர்களுக்கு வழி காட்டியாக ஆர்வத்துடன் விரைந்து வந்து, சேர்ந்து வாழும் உயரிய பண்பை நிலைநாட்டுவோம் என்று எதிர்பார்க்கிறோம்.

கோவை
23—4—56 சாந்தா

[நாட்டின் நலனுக்கு, மக்களின் நல்வாழ்வுக்குத் தட்சிணப் பிரதேச அமைப்பு ஏற்படுவது ஒன்றுதான் சிறந்தது என்று கருதுகிறோம். ஆகையால் அதை வன்மையாக ஆதரித்து வருகிறோம். தங்களைப் போன்றவர்கள் அதன் உண்மையை உணர்ந்து உற்சாகமாக எழுதி விருப்பதைப் பாராட்டுகிறோம். இது போலவே மக்களின் கருத்தை மேலும் மேலும் வரவேற்கிறோம். —ஆசிரியர்]

★

## அணுகுண்டைப் பற்றி அல்ல

ராஜாஜி அவர்களின் "அணுகுண்டைப் பற்றி அல்ல" என்ற கதையைப் படிக்கப் படிக்கச் சிந்தனைக்கு விருந்தாயிருந்தது.

பத்து ஆண்டுகளுக்குமுன் ஜார்ஜ் பெர்னார்ட் ஷாவிடம் சில பத்திரிகை நிருபர்கள் சில கேள்விகளைக் கேட்டார்கள். "யுத்த மேகம் உலகத்தைக் கவ்வி நிற்கிறதே. மூன்றாவது உலக யுத்தம் நிகழ்ந்தால் அதன் முடிவு எப்படியிருக்கும்!" என்பது ஒரு கேள்வி.

ஷா சொன்னார்: "எனக்கு மூன்றாவது உலக யுத்தத்தைப் பற்றிச் சொல்லத் தெரியாது! வேண்டுமானால் நான்காவது மகா யுத்தத்தைப் பற்றிக் கேளுங்கள்" என்றார்.

நிருபர்களில் ஒருவர் ஷாவின் விருப்பப்படியே "நான்காவது உலக மகாயுத்தத்தைப் பற்றித் தான் சொல்லுங்களேன்" என்று கூறினர்.

அதற்கு ஷா அளித்த பதில், "நான்காவது யுத்தத்துக்கு உலகம் என்று ஒன்று இருக்காது" என்பதுதான்.

வேண்டாத சந்தேகம் விளைவித்த விபரீதம் துஷ்டர்கள் இருவரை மட்டுமல்ல, ஊராரையே கலங்க வைத்தது. அக் கதை கற்றோரும், மற்றோரும் கவனத்தில் கொள்ள வேண்டிய அருமையான கருத்தோவியம்.

கதையில், துஷ்டர்கள், அவர்கள் மனைவிமார்கள், இவர்களிடையே ஏற்பட்ட சந்தேகக் கண்ணோட்டம், அறிவீனத்தில் விளைந்த பாதுகாப்பு யோசனை, பாம்பு, சாமியாரின் யோசனை, பஞ்சாயத்து, ஊரார் தூக்கமில்லாமல் படும் அவஸ்தை முதலியவைகளைப் பற்றிப் படித்தாலும் நம் கருத்தில் தோன்றுவது அமெரிக்காவும், ரஷ்யாவும் உலகைக் கட்டியாள நினைக்கும் ஆசையில் ஏற்படும் போட்டியும், சந்தேகமும், விஞ்ஞானிகளின் அணுகுண்டு ஹைட்ரஜன் குண்டு கண்டு பிடிப்பும், இவைகளின் சோதனையால் மக்கள் படும் அவஸ்தையும்தான். தேர்ந்த ஞானிகளின் அருள் வாக்குகளெல்லாம் நல்லதென்று தெரிந்தாலும் மனிதர்களிடத்தில் மேவி நிற்கின்ற அஞ்ஞானத்தால் நடைமுறையில் செயலாற்ற அவர்கள் எளிதில் துணிவதில்லை. கதையில் வரும் சாமியாரின் யோசனையை, 'இந்த ஆண்டிக்கு என்ன தெரியும்!' என்று சொல்லும் மேல் வீட்டுக்காரியைப் போல், அந்த ராஜாஜி எதை வேண்டுமானாலும் சொல்லுவார் என்று சொல்லி ஒதுக்குபவர்கள் பாலர் நிலையிலேயே இருக்கிறார்களெனக் கருதித்தான், பாலர் பகுதியில் கதையாக வந்தது போலும்.

திருத்துறைப்பூண்டி
5—5—56 எஸ். ஸ்ரீனிவாசன்

★

## பஸ்ஸில் பெண்களின் கஷ்டம்

ஒருநாள் நான் பிராட்வேயி லிருந்து அய்யனாவரம் பஸ்ஸில் ஏறினேன். பஸ்ஸில் உட்கார இடமில்லாததால் இரு கைகளிலும் இரு பைகளுடன் நிற்க வேண்டியதாயிற்று. கண்டக்டர் என்னைச் சில்லறை கேட்டார். "இரு பைகளையும் வைத்துக் கொண்டு ஓடும் பஸ்ஸில் பர்ஸைத் திறந்து சில்லறை எப்படிக் கொடுப்பது!" என்று கண்டக்டரைக் கேட்டேன். இதைக்கேட்டதும் உட்கார்ந்திருந்த ஒரு வாலிபர் எழுந்திருந்து, "நீங்கள் உட்காருங்கள்" என்றார். பிறகு உட்கார்ந்து சில்லறையைக் கொடுத்தேன். பஸ் 'டிராம் ஷெட்' வந்தவுடன் இரு ஸ்திரீகள் கையில் குழந்தைகளுடன் ஏறினார்கள். அவர்களும் குழந்தையை வைத்துக் கொண்டு நின்று கொண்டே சில்லறையைப் பர்ஸிலிருந்து எடுக்க ரொம்பக் கஷ்டப்பட்டதால் நான் எழுந்திருந்து ஒரு ஸ்திரீயை

மனைவி:—என்னங்க! தொழிலுக்குப் போகாமல் காலையிலே எழுந்து பேப்பர் படிக்க ஆரம்பிச்சுட்டீங்க?

பூட்டு ரிப்பேர்க்காரர்:— அதுக்குத்தானே பேப்பர் பார்க்கிறேன், எந்தெந்த வீட்டில் திருடன் பூட்டை உடைத்துக் கொள்ளையடித்திருக்கான்னு!......

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

என் இடத்தில் உட்கார வைத்தேன். மற்றொரு ஸ்திரீ நின்று கொண்டே இருந்தார். ஆண்கள் அவர்கள் சட்டைப் பையிலிருக்கும் சில்லறையை ஒரு கையால் நின்று கொண்டே எடுத்துக் கொடுத்து விடலாம். பெண்கள் கையில் சுமையுடன் நின்று கொண்டே பர்ஸைத் திறந்து சில்லறை எப்படிக் கொடுப்பது! கீழே விழுந்துவிட மாட்டார்களா! ஸ்திரீகள் பஸ்ஸில் நின்று கொண்டிருந்தால் சில சமயம் தான் ஆண்கள் எழுந்திருந்து இடம் கொடுக்கிறார்கள். அதுவும் என்னைப் போல் நாகரிக இளம் பெண்களாயிருந்தால்தான்!

ஆகையால், ஓடும் பஸ்ஸில் நின்றுகொண்டே கண்டக்டருக்கு, சில்லறையை எடுத்துக் கொடுக்கும் ஸ்திரீகளின் கஷ்டத்தை உத்தேசித்து, ஒவ்வொரு பஸ்ஸிலும் "தயவு செய்து ஸ்திரீகளுக்கு உட்கார இடம் கொடுங்கள்" என்று ஒரு பலகையைத் தொங்க விட்டால் அப்பொழுதாவது விழித்துக் கொண்டு ஆண்கள் இடம் கொடுப்பார்கள் அல்லவா!

சென்னை
7—5—56

என். வி. சாவித்திரி

✶

## பாதுகாக்கப்பட்டதா? தேக்கப்பட்டதா?

நாடெங்கும் நடைபெற்று வரும் சமூதாய நலத்திட்டம், தேசிய வளர்ச்சித்திட்டம் இவைகளின் மூலமும் கிராமக் குடிதண்ணீர் விநியோகம், தேசியக் குடிதண்ணீர் முதலிய திட்டங்களின் மூலமும், நாடெங்கும் கிராமங்கள்தோறும் குடிதண்ணீர் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. பல ஊர்களில் மேல் மட்டத் தொட்டிகளும், தானாக இயங்கும் குழாய்களும் காட்சியளிக்கின்றன. ஏதோ அங்கும் இங்குமாகச் சில இடங்களில் குழாய்களில் பழுது ஏற்பட்டுத் தண்ணீர் விநியோகம் இல்லாமல் கிடக்கிறதே தவிர, பெரும்பாலான இடங்களில் திருப்திகரமாக வேலை செய்து வருகிறதைப் பார்க்கிறோம்.

இவைகளின் பெயர் 'பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர்'. பலஇடங்களில் இப்படி எழுதிப் போடப்பட்டிருக்கின்றன. எப்படிப் பாதுகாக்கப்படுகிறது! எதிலிருந்து பாதுகாக்கப்படுகிறது! தீமை தரும் கொடிய கிருமிகளிலிருந்தா! அப்படியானால் அந்தக் கிருமிகளைக் கொல்வதற்கு என்ன முறைகளைக் கையாள்கின்றனர்! எங்குமே தண்ணீரில் "குளோரின்" என்று கூறப்பட்ட கிருமிகளைக் கொல்லும் மருந்தைக் கலப்பதாகத் தெரியவில்லையே! அப்படியாயின் பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் என்ற பெயர் எப்படிப் பொருந்தும்!

நான் விசாரித்தறிந்த வரையில் செங்கல்பட்டு ஜில்லாவில் எல்லாத் தண்ணீர்த் திட்டங்களிலும் 'குளோரின்' கலந்து நிஜமாகவே பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் கிடைக்கிறதாம்.

இதர ஜில்லாக்களில் ஏதோ ஒரு சில இடங்களில் 'குளோரின்' கலந்து குடிதண்ணீர் விநியோகிக்கப்படுகிறது. தவிர, பல இடங்களில் அபாயம் நிறைந்த சுத்திகரிக்கப்படாத தண்ணீரே குடி தண்ணீருக்கு உபயோகப்படுகிறது.

'மேல்மட்டத் தொட்டி போட்டிருக்கிறோம். தானாக இயங்கும் குழாய்கள் வைத்திருக்கிறோம். குழாயைத் திருகி விட்டால் கொட்டுகிறது தண்ணீர். இது போதாதா!' என்று கேட்கலாம். அப்படியாயின் தயவு செய்து அவைகளுக்குப் 'பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர்' என்ற பெயரை உபயோகிக்க வேண்டாம். 'தேக்கப்பட்ட குடிதண்ணீர்' என்று வேண்டுமானால் பெயர் கொடுக்கட்டும்.

உசிலம்பட்டி
12—4—56

கே. வி. முருகன்

✶

## பொன்னான வாய்ப்பு

"கல்கி" பத்திரிகையில் மாதச் சிறுகதைப் போட்டி வைத்திருப்பது பேனா பிடித்தவர்களுக்கும் ரசிகர் குழாத்துக்கும் ஒருங்கே மகிழ்வளிப்பதாகும்.

சமீபத்தில் நடந்த எழுத்தாளர் மாகாநாட்டில் இந்த அம்சம் சில பிரபல புள்ளிகளால் வலியுறுத்தப்பட்டது. கணிசமான அளவுக்குச் சன்மானம் அளிக்கப் பத்திரிகைகளோ, ஸ்தாபனங்களோ முன் வந்தால்தான் எழுத்தின் தரத்தில் ஒரு நல்ல உயர்வை எதிர்பார்க்கலாம் என்று கூறப்பட்டது. இதற்கும் ஒரு சந்தர்ப்பம் கொடுக்கக் 'கல்கி' முன் வந்திருப்பது நல்ல சேதி.

இலக்கிய வளர்ச்சி ஆர்வத்திலும் திறமையிலும் யாருக்குமே சளைக்காத நம் தமிழ் நாட்டுப் பேனா மன்னர்கள் இந்தப் பொன்னான வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு ரசிகர்களைத் திக்குமுக்காட வைப்பார்களாக.

செவ்வாய்பேட்டை ரோடு
2—5—56

ர. கிருஷ்ணன்

# உங்கள் தாகத்தை தணிக்க கூல்ரெக்ஸ் அருந்துங்கள்!

**அது உற்சாகமளிக்கக்கூடிய புதியதோர் பானம் இப்பொழுது பாக்கெட்டில் கிடைக்கிறது**

கூல்ரெக்ஸ் ஒரு ஸிரப் பவுடர். அது உங்கள் தாக சாந்திக்கேற்ற பானம். ஒவ்வொரு பாக்கெட்டிலிருந்தும் 32 பெரிய டம்ளர் அளவு பானங்கள் தயாரிக்கலாம்; ஒரு டம்ளர் பானத்தின் விலை ஒரு அணாவுக்கும் குறைவுதான்.

தயாரிப்பது மிகவும் எளிது: ஒரு டம்ளர் தண்ணீரில் சிறிதளவு கூல்ரெக்ஸ் பவுடரைக் கலந்து, உங்கள் ருசிக்கேற்ற சர்க்கரையைச் சேர்த்துக்கொள்ளவும். கூல்ரெக்ஸ் எங்களின் இவ்வருடத்திய அரிய ஒரு சாதனை.

தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு வித பானங்கள்
ஆரஞ்சு, ராஸ்ப்பெரி, ஸ்ட்ராபெரி, பைன் ஆப்பிள்

**கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) லிட்.**
பம்பாய்—1 கல்கத்தா—1



# கழுதையும் மூட்டையும்



அழுக்கு மூட்டை ஏற்றிக் கழுதையை ஓட்டிக் கொண்டிருந்தான் வண்ணான். நம்முடைய நாட்டுக் கழுதைகள் தெரியுமே, பிறப்பு, தீனி, பலம் எல்லாம் மட்டம். கழுதை மேல் ஏற்றும் இரட்டை மூட்டையும் உங்களுக்குத் தெரியும். இரண்டு பக்கம் சம பாரமாகத் தொங்கும். கழுதையின் முதுகு வளைந்து போகும்.

இப்படிப் போய்க் கொண்டிருக்கும் போது மூட்டை கழுதையுடன் பேச ஆரம்பித்தது. "ஏ, கழுதையே! உன்னைப் போல் சாதுவை நான் கண்டதில்லை. எவ்வளவு அடித்தாலும் கேட்டுக் கொண்டிருக்கிறாய். உன்னைப் பற்றி எனக்குப் பரிதாபமாக இருக்கிறது."

இப்படி மூட்டை சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஒரு அடி கொடுத்தான், பின்னால் நடந்து வந்த வண்ணான்.

"உன்மேல் நான் ராஜா மாதிரி சவாரி செய்கிறேன், தெரியுமா? அரமனைக் குதிரையைப் போல் தலை தூக்கி நட. தொங்கப் போட்டுக் கொண்டு நடக்காதே" என்றது மூட்டை.

பாவம் கழுதைக்கு அடி வேறு; அவமானம் வேறு.

"அழுக்கு மூட்டையே! அகங்காரப் பட வேண்டாம். இன்னும் கொஞ்சம் நேரத்தில் எனன ஆகப் போகிறது பார்!" என்றது கழுதை

"என்ன ஆகப் போகிறது? ஒன்றுமில்லை. பேசாமல் நட!" என்றது மூட்டை.

ஆற்றண்டை வந்ததும் வண்ணான் மூட்டையை எடுத்துக் கரையில் வைத்து விட்டுக் கழுதையைப் புல் மேய விட்டு விட்டான். அது ஆற்றில் தாகம் தீர்த்துக் கொண்டு கரைமேல் சந்தோஷமாக ஓடிச் சென்றது.

மூட்டையை அவிழ்த்துத் துணிகளைப் பிரித்து வண்ணானும் அவன் மனைவியும் துவைக்க ஆரம்பித்தனர். "உஸ்! உஸ்" என்று கல்மேல போட்டு அடித்தார்கள்.

கழுதை மேலே கரையில் நின்று பல்லைக் காட்டிற்று. "அடி! போடு! இன்னும் போடு!" என்றது. "அகங்காரத்தை நன்றாகக் கசக்கிப் பிழிந்து போடு! அடி! இன்னும் போடு!" என்றது.

"ஐயோ, போதும், இனிமேல் அப்படிப் பேச மாட்டேன்!" என்றது துணி.

வண்ணான் அதைக் கேட்கவில்லை. அது பேசியதும் அவனுக்குத் தெரியாது. அவன் கவனம் எல்லாம் துவைப்பதில். அடியடி என்று அடித்துக் கொண்டே இருந்தான். இப்படியே துணிகளை எல்லாம் துவைத்து விட்டு வெயிலில் புல் தரையில் விரித்து உலர வைத்தான்.

புத்தி வந்ததா?" என்றது கழுதை.




"வந்தது அப்பனே!" என்றது துணி.

"இன்னும் உன் கதை முடியவில்லை, அப்பனே!" என்றது கழுதை.

"ஐயோ. அது வென்ன? சொல்!" என்றது வெள்ளைச் சொக்காய்.

"வீட்டுக்குப் போன பின் உனக்கே தெரியும். இப்போது சொல்ல அவசரமில்லை" என்றது கழுதை.

* * *

வீட்டில் துணிகளை மடித்து இஸ்திரி போட்டான் வண்ணான். கடக்கட இஸ்திரி பெட்டியை வைத்தான் சொக்காய் பேரில்.

"ஐயோ! செத்தேன்!" என்றது சொக்காய். வண்ணான் காதில் அது ஏறவில்லை. அவன் பாட்டுக்கு அழுத்தி இழுத்தான். மூச்சு நின்று போயிற்று சொக்காய்க்கு.

"அற்ப நேரம் என் முதுகின் பேரில் சவாரி செய்தாய். என்ன வென்னவோ பேசினாய். இப்போது என்ன சொல்லுகிறாய்?" என்றது கழுதை வாசலிலிருந்து.

"அப்பா தம்பி! நீ சும்மா இரு. எனக்குப் புத்தி வந்தது. சவாரியும் போதும். பிறகு கஷ்டமும் போதும். இனிமேல் நான் உன் மேல் ஏறமாட்டேன்" என்றது.

"உன் கதி இதுவே. நீ கிழிந்து குப்பைக் குப்போகும் வரையில் வண்ணான் கையில் இதையெல்லாம் அனுபவிக்க வேண்டும். தெரிந்து கொள்" என்றது கழுதை.

"நீ படும் கஷ்டம் பெரிதல்ல. என் கஷ்டமே பெரிது" என்றது துணி.

# டூமெக்ஸ்
## பால் உணவு

குழந்தைகளுக்கு டூமெக்ஸ் புகட்டி அவர்களின் வளர்ச்
சியைக் கவனியுங்கள்!

# பாலர் மலர்

## துப்பறியும் நாய்

**'சசி'**

மாடவீதியின் இரண்டு பக்கங்களிலும் பெரிய பெரிய வீடுகளும் பங்களாக்களும் இருந்தன. ஒருநாள் மாலை ஒரு பங்களாவின் சொந்தக்காரர் வாசற் பக்கம் வெகு கோபத்துடன் நின்று கொண்டிருந்தார். அப்பொழுதுதான் ஆபீஸிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த ஒருவரைப் பார்த்து, "கேட்டீர்களா அநியாயத்தை? நேற்றுத் தான் புது மாதிரியான தோசைக் கல் ஒன்று வாங்கினோம். அது சிறியதாகவும், அழகாகவும், இருந்தது. சமையலறையில் இருந்த அந்தக் கல்லை இன்று காணவில்லை!" என்று படபடத்தார்.

இதற்குள் அடுத்த வீட்டுக்காரர், "அதைச் சொல்லத் தான் நானும் வந்தேன். எங்கள் வீட்டிலேயும் அதே மாதிரி தோசைக் கல் ஒன்று வாங்கியிருந்தோம். அதுவும் காணவில்லை" என்று கூறினார்.

இதற்குள் இன்னொருவர் வந்தார். "ஸார்! இன்றைக்கு எங்கள் வீட்டிலிருந்த தோசைக் கல்லும் காணவில்லை" என்று அவர் பதறினார்.

அதே சமயத்தில் கோடி வீட்டுத் தாத்தா கையில் விசிறியுடன் அங்கே வந்தார். "என்ன ஐயா இது? பெரிய மனுஷராகிய நீங்கள் இந்தத் தெருவில் இருக்கும்போதே, திருட்டு நடக்கிறதே. எங்கள் வீட்டில் இருந்த தோசைக் கல்லைக் காணோம். இந்தத் திருட்டைக் கண்டுபிடிக்க ஏதாவது வழி செய்ய வேணும்" என்றார் தாத்தா.

"நீங்கள் ஒருவரும் கவலைப்பட வேண்டாம். அந்தத் திருட்டைக் கண்டு பிடிக்க இதோ இப்பொழுதே போலீஸுக்கு டெலிபோன் செய்து துப்பறியும் நாய்களை அழைத்து வர ஏற்பாடு செய்கிறேன், பாருங்கள்!" என்று விரைந்தார் முதல் வீட்டுக்காரர்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் ஒரு போலீஸ் வண்டி அங்கு வந்து நின்றது. அதிலிருந்து ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டரும் நான்கு போலீஸ் சேவகர்களும் இறங்கினார்கள். அவர்களைப் பின்பற்றி



இரண்டு துப்பறியும் நாய்கள் இறங்கின. தெருவிலுள்ளவர்கள் போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் விவரத்தைச் சொன்னார்கள். உடனே நாய்கள் துப்பறியும் வேலையைத் தொடங்கின. ஒரு நாய் அடுத்த வீட்டுக்கு அனுப்பப்பட்டது. இன்னொரு நாய் எதிர் வீட்டுக்குச் சென்றது. துப்பறியும் நாய்கள் திருட்டை எப்படிக் கண்டு பிடிக்கப் போகின்றனவோ என்று ஆவலுடன் யாவரும் கூட்டமாக வீதியில் நின்று கொண்டிருந்தார்கள். வீட்டுக்குள் சென்ற நாய்கள் மோப்பம் பிடித்துக் கொண்டே வெளியே வந்தன. இரண்டு நாய்களும் ஒரே இடத்துக்கு வந்து நின்று ஒன்றுக்கொன்று ஏதோ பேசுவதுபோல் இருந்தன. கடைசியில் அவை இரண்டும் ஒரு பெரிய பங்களாவின் வாசலில் போய் நின்றன. அந்தப் பங்களாவின் வாசல் பக்கம் மூடியிருந்ததால் உள்ளே போக முடியாமல் தவித்தன. போலீஸ் இன்ஸ்பெக்டர் பங்க






ளாவின் கதவைத் திறக்கப் போனார். உடனே, அங்கிருந்தவர்கள் "ஸார், அந்தக் கதவைத் திறக்க வேண்டாம். இந்த வீட்டில் இருப்பவர் ஒரு பெரிய தனவந்தர். ஏதோ உங்கள் நாய்கள் தவறுதலாக இந்த வீட்டைக் காண்பிக்கின்றன" என்று எச்சரித்தார்கள்.

உடனே போலீஸ் இன்ஸ்பெக்டர், "தனவந்தராக இருந்தால் எனக்கு என்ன ஐயா? நான் கடமையைச் செய்தே தீருவேன். தனவந்தர் பெரிய மனிதராக இருக்கலாம். அவர் வீட்டில் திருடன் ஒளிந்து கொண்டிருந்தால் என்ன செய்வது? இந்தத் துப்பறியும் நாய்கள் எனக்குத் தெரிந்த வரையில் தவறியதே இல்லை" என்று சொல்லி விட்டுக் கதவுகளைத் திறந்தார். துப்பறியும் நாய்கள் மோப்பம் பிடித்துக் கொண்டே அந்தப் பங்களாவின் மாடிக்குப் போயிற்று. எல்லோரும் பின் தொடர்ந்தார்கள். பிறகு நாய்கள் படிகளின் வழியாக மேல் மாடிக்குச் சென்றன. இன்ஸ்பெக்டரும் மற்றவர்களும் நாய்களை மேலும் பின் தொடர்ந்து சென்றார்கள். மேல் மாடிக் கதவு சாத்தப்பட்டிருந்தது.














* துப்பறியும் நாய்கள் மோப்பம் பிடித்துக் கொண்டே அந்தப் பங்களாவின் மாடிக்குச் சென்றன. *

நாலைந்து பேர் சேர்ந்து ஏதோ பாத்திரங்களை உடைப்பது போலத் தோன்றியது. பேச்சுக் குரல்களும் கேட்டன. அந்தச் சத்தத்தைக் கேட்ட தெருப் பிரமுகர்கள் திடீரென்று திருடர்கள் தங்கள் மீது பாய்ந்து விடுவார்களோ என்று பயந்து மேலே போகாமல் நின்று விட்டார்கள். இன்ஸ்பெக்டரும் போலீஸ் சேவகர்களும் தடிகளைக் கைகளில் ஏந்திய வண்ணமாகக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றார்கள். உள்ளே போன போலீஸ் இன்ஸ்பெக்டர் சிரித்துக் கொண்டே வெளியே வந்து மற்றவர்களைப் பார்த்து, "கொஞ்சம் உள்ளே எட்டிப் பாருங்கள். இப்பொழுதுதான் சுவாமி புறப்பட்டுக் கொண்டிருக்கிறது!" என்றார். மற்றவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. மெதுவாக எட்டிப் பார்த்தார்கள். அப்பொழுது ஒரு மரப்பாச்சியைச் சுவாமி போல அலங்கரித்துக் கொண்டு நாலு பையன்கள் 'ஜே ஜே' என்று கத்திக் கொண்டிருந்தார்கள். முதல் வீட்டுப் பாலுவும் அடுத்த வீட்டு இந்திராவும், எதிர்வீட்டுச் சிவசங்கரியும் கோடி வீட்டுக் குமாரும் தங்கள் தங்கள் வீட்டிலிருந்து கொண்டு வந்த தோசைக் கல்லை ஒரு கையினால் சேமக் கலம்போல் பிடித்துக் கொண்டு, மற்றொரு கையிலுள்ள மத்தினால் பலமாக அடித்துக் கொண்டிருந்தார்கள்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் பாலுவைக் கூப்பிட்டு, "ஏண்டா பயலே! வீட்டில் வைத்திருந்த தோசைக் கல்லை ஒருவருக்கும் தெரியாமல் விளையாடுவதற்குக் கொண்டு வரலாமா?" என்று கேட்டார். உடனே பாலு "பின்னே என்ன ஸார் செய்யறது? விளையாடுவதற்குத் தம்பட்டம், டமாரம், ஏதாவது வாங்கித்தா என்றால் வாங்கிக் கொடுத்தால்தானே? ஆகவேதான் நாங்கள் எல்லோரும் சேர்ந்து ஒரு யோசனை செய்தோம். அதன்படி எல்லோரும் அவரவர்கள் வீட்டிலுள்ள தோசைக் கல்லை எடுத்து வந்து விட்டோம்" என்றான். எல்லோரும் அதைக் கேட்டுக் கலகல வென்று நகைத்தனர்.

பிறகு இன்ஸ்பெக்டர் அங்கிருந்தவர்களிடம், "ஸார்! விளையாட்டுக்காக உங்கள் குழந்தைகள் தோசைக் கல்லை எடுத்து வந்தாலும், எங்கள் துப்பறியும் நாய்கள் அவற்றின் கடமையைச் செய்து விட்டன. நாங்கள் போய் வருகிறோம்" என்று விடை பெற்றுக் கொண்டார். மற்றவர்களும் அவரைத் தொடர்ந்தனர்.

மறு நாள் சிறுவர்களும் சிறுமிகளும் தோசைக் கல்லை எடுத்து வரவில்லை. அவர்கள் எதற்காக எடுத்துவரவேண்டும்? அவர்களுடைய பெற்றோர்கள்தான் அவர்களுக்கு அன்றே தம்பட்டம் வாங்கித் தந்து விட்டார்களே!



நூல் கண்டு :- என் நூலைக் கொடு!
கத்தரிக்கோல் :- கொஞ்சம் இரேன்; 'ஸ்கிப்பிங்' விளையாடி விட்டுத் திருப்பித் தருகிறேன்!



# வேடி கை யா ட் டு

கத்தரிக்காயிலிருந்து எலி வரைவது எப்படி?



1



2



3



4





நான்கு முயல்களில் ஒரு முயல் வித்தியாசப்படுகிறது. அது எந்த முயல்? அது என்ன வித்தியாசம்! சொல் பார்க்கலாம்;



படத்தில் எல்லாம் வெவ்வேறு இடத்தில் மாறி இருக்கின்றன. எது, எது எந்தெந்த இடத்தில் இருக்க வேண்டும் என்பதைக் கண்டுபிடி!



நான் எங்கே சென்றாலும் தன் வீட்டையும் கூடவே எடுத்துச் செல்லும் ஒரு ஜந்து உண்டு. அது என்ன?











# தம்பி எங்கே?

மொழிபெயர்ப்பு :

எஸ். வி. எஸ்.

முன்னொரு காலத்தில் ஒரே ஒரு ஊரில் ஒரு குடியானவனும் அவன் மனைவியும் வசித்து வந்தார்கள். அவர்களுக்கு இரண்டு குழந்தைகள். மூத்தவள் பெண். வயது ஏழு இருக்கும். அடுத்தது சின்னஞ் சிறு ஆண் குழந்தை.

ஒரு நாள் குடியானவனும் அவன் மனைவியும் வெளியே போக வேண்டியிருந்தது. அதனால் கணவனும் மனைவியுமாகக் குழந்தைகளை வீட்டில் விட்டுப் போவது என்று தீர்மானித்தார்கள். போகுமுன் பெண்ணை அழைத்து, "கண்ணே! நாங்கள் இரண்டு பேரும் வெளியே வயலில் வேலை செய்வதற்குப் போகிறோம். நாங்கள் திரும்பிவரும் வரையில் தம்பிப் பாப்பாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நீ சமர்த்தல்லவா? வீட்டை விட்டு வெளியே போகாமல் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்! என்ன? தெரிந்ததா? நாங்கள் சாயந்திரம் திரும்பி வரும்போது உனக்கு அழகான பட்டுக் கைக்குட்டை வாங்கி வந்து தருகிறோம்! புரிந்ததா?" என்றெல்லாம் சொல்லி விட்டுச் சென்றார்கள்.

வயது ஏழானாலும் குழந்தைதானே? விளையாட்டில்தானே மனசு செல்லும். அதனால் அப்பாவும் அம்மாவும் வெளியே போன சற்று நேரத்துக்கெல்லாம் அவர்கள் சொல்லிவிட்டுப் போன விஷயங்களை அடியோடு மறந்து போய்விட்டாள். தம்பியை வீட்டுக்கு வெளியில் புல் தரையில் விளையாட விட்டு அவள் தன் தோழிப் பெண்களுடன் விளையாடப் போய் விட்டாள்.

அவள் போன சற்று நேரத்துக்கெல்லாம் வானில் பெருத்த நாரைக் கூட்டம் எங்கிருந்தோ தோன்றியது. அவற்றில் ஒன்று தரையில் பாய்ந்து, விளையாடிக் கொண்டிருந்த சிறு குழந்தையை முதுகில் சிறகின் மீது வைத்துக் கொண்டு பறந்து போய் விட்டது.

விளையாடப் போன பெண், வீட்டுக்குத் திரும்பி வந்து பார்த்தால் தம்பிப் பாப்பாவைக் காணோம்! அவள் என்ன செய்வாள்? அங்கும் இங்கும் பரபரப்புடன் மூச்சுத் திணற ஓடியாடித் தேடினாள்! அவன் எங்கேயாகிலும் இருந்தால் தானே அகப் படுவான்?

அவளுக்குப் பெரும் பயமாகப் போய் விட்டது. விம்மி விம்மி அழுதாள். அழுகையோடு அவன் பெயரைச் சொல்லி அழைத்தாள். ஒரு பயனுமில்லை.

வீட்டை விட்டு வெளியே வந்து பார்த்தாள். தூரத்தே நாரைகள் கூட்டமாகப் பறந்து சென்று கொண்டிருப்பது தவிர வேறு ஒன்றும் தெரியவில்லை. இதைப் பார்த்தவுடன் அவளுக்கு ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. ஊரில் ஜனங்கள் நாரைகள் குழந்தைகளைத் திருடிக் கொண்டு போகும் என்று பேசிக் கொண்டது ஞாபகம் வந்தது. உடனே, தன் தம்பியை இந்த நாரைகள்தான் தூக்கிக் கொண்டு போயிருக்க வேண்டும் என்று தீர்மானித்து விட்டாள்! நாரைகளைத் துரத்திக்கொண்டு ஓடவும் தொடங்கி விட்டாள்.

வெகுநேரம் ஓடினாள். நாரைகள் அவள் கண் பார்வையை விட்டு மறைந்து போய் விட்டன. இருப்பினும், அவள் ஓடிக் கொண்டிருந்தாள். நாரைகள் எந்தப் பக்கம் போயின என்பதொன்றும் புரியவில்லை. போகும்





வழியில் ரொட்டி சுடும் சூளை அடுப்பு இருந்தது. அதைக் கேட்டால் ஒரு வேளை நாரைகள் எந்தப் பக்கம் போயின என்று சொல்லக் கூடுமோ என்று நினைத்து, "ரொட்டி யடுப்பே! ரொட்டி யடுப்பே! நாரைகள் எந்தப் பக்கம் பறந்து போயின? சொல்ல மாட்டாயா?" என்று கேட்டாள்.

"என்னிடம் நல்ல அருமையான கம்பு மாவில் செய்த ரொட்டி யிருக்கிறது. அதில் ஒன்றைச் சாப்பிடு. பிறகு சொல்லுகிறேன்!" என்றது அடுப்பு. ஆம்! அதற்கு அந்தப் பெண்ணைப் பார்த்ததில் அவ்வளவு சந்தோஷம்.

இதைக் கேட்ட பெண், வியப்பினால் கண்கள் எல்லாம் மலர, "கம்பம் ரொட்டியா! அடேயப்பா! அவ்வளவு உயர்ந்த ரொட்டியை நான் சாப்பிடுவதா! எனக்கு வீட்டில் கோதுமை ரொட்டி கிடைப்பதே கஷ்டமாயிற்றே! நான் கம்பம் ரொட்டி சாப்பிட மாட்டேன்" என்றாள்.

அதாவது கோதுமை மாவில் செய்த ரொட்டியைவிடக் கம்பு மாவில் செய்த ரொட்டி மிக உயர்ந்தது என்பது அவள் அபிப்பிராயம்!

அடுப்புக்குப் பெருத்த ஏமாற்றமாகப் போய்விட்டது. நாரைகள் எந்தப் பக்கம் பறந்து போயின என்று சொல்ல அது மறுத்து விட்டது!

பெண் மேலே ஓடினாள். இப்பொழுது அவள் பாதையில் ஒரு அழகிய ஆப்பிள் மரத்தைப் பார்த்தாள். பெண்ணுக்கு ஆப்பிள் மரத்தைக் கேட்க வேண்டும் போல் தோன்றியது.

"ஆப்பிள் மரமே! ஆப்பிள் மரமே! நாரைகள் எந்தப் பக்கமாகப் பறந்து போயின, சொல்லேன்!" என்று பரிவுடன் கேட்டாள்.

ஆப்பிள் மரமும், அடுப்பைப் போலவே, "என்னுடைய அருமையான காட்டு ஆப்பிள் பழத்தைச் சாப்பிடு, சொல்கிறேன்!" என்று கூறியது.

"எங்கள் வீட்டில் சாதாரண நாட்டு ஆப்பிளே கிடையாது. இங்கே வந்து இவ்வளவு உயர்ந்த காட்டு ஆப்பிளைச் சாப்பிடுவதாவது! அது நடக்காத காரியம்!" என்று கூறி விட்டாள்.

ஆப்பிள் மரத்துக்கும் கோபம் வந்து விட்டது. சொல்ல மறுத்து விட்டது.

பெண் மீண்டும் தன் தம்பியைத் தேடிக் கொண்டு ஓடினாள். கால் போன போக்கில் ஓடினாள். ஓடி, நீருக்குப் பதில் பால் ஓடும் நதியை அடைந்தாள். நதியின் கரைகள் பழங்களின் சதையின் பற்றாகவே இருந்தன. இதைப் பார்த்த அந்தப் பெண், "பாலாறே! பழக்கரையே! என் தம்பியை ஒரு நாரைக் கூட்டம் தூக்கிச் சென்று விட்டது. அந்த நாரைகள் ஒரு வேளை இந்த வழியாகச் சென்றனவா?" என்று கேட்டாள்.

"என் நதியில் ஓடும் பாலையும், என் கரையிலுள்ள பழத்தையும் சாப்பிடு. சொல்லுகிறேன்" என்றது பாலாறு.

"நாங்கள் ஏழைகள். எங்கள் வீட்டில் பால் ஏது? பழம் ஏது? வீட்டிலில்லாத பழக்கம் இங்கே வைத்துக் கொண்டால் பிறகு சரிப்படுமா? அதனால் சாப்பிடுவதற்கில்லை!" என்று கூறி விட்டாள் அந்தச் சிறுமி.

இதைக் கேட்டதில் பாலாற்றுக்கு வருத்தமாகப் போய் விட்டது. பெண்ணுக்கு நாரைக் கூட்டத்தைப் பற்றிச் சொல்ல மறுத்து விட்டது.

எனினும் அவள் சோர்ந்து விடவில்லை. தன் தேடு படலத்தை விட்டு விடவில்லை. வயல்களில் தேடினாள்; வனங்களில் தேடினாள். எங்கெல்லாமோ ஓடியோடித் தேடினாள். தம்பி கிடைக்கவில்லை. இதற்குள் அஸ்தமிக்கும் நேரம்வந்துவிட்டது. வெறும் கையோடு வீட்டுக்குத் திரும்புவதைத் தவிர வேறு வழி புலப்படவில்லை.

இப்படி அவள் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்த போது ஒரு பெட்டைக் கோழியின் கால்கள் மீது ஒரு குடிசையைப் பார்த்தாள். அந்தக் குடிசைக்குச் சின்னஞ்சிறு ஜன்னலிருந்தது. அது சுழன்று வந்து கொண்டிருந்தது.

சிறுமி ஜன்னல் வழியாக உள்ளே பார்த்தாள். அங்கே உள்ளே ஒரு பக்கம் மந்திரவாதிக் கிழவி பாபாயாகா சணலைக் கயிறாகத் திரித்துக் கொண்டிருந்தாள். இன்னொரு பக்கம் பெஞ்சியிருந்தது. அந்தப் பெஞ்சியின் மீது அந்தப் பெண்ணின் தம்பி உட்

கார்ந்திருந்தான். வெள்ளி ஆப்பின்களோடு விளையாடிக் கொண்டிருந்தான்.

இந்தக் காட்சியைப் பார்த்தானோ இல்லையோ, பெண் குடிசைக்குள் நுழைந்து மந்திரவாதிக் கிழவிக்கு அருகில் போய், "பாட்டி சௌக்கியமா?" என்று அன்போடும் மரியாதையோடும் கேட்டாள்.



கிழவி, "சௌக்கியந்தான் அம்மா! நீ இங்கே எதற்கு வந்தாய்?" என்று கேட்டாள்.

"தெருவில் நடந்து வந்த போது பனியில் சட்டை நனைந்து விட்டது. அதைக் காயப் போட்டுக் கொள்ளலாம் என்று வந்தேன், பாட்டி!" என்றாள்.

"ஓ! அப்படியா? சரி, ஆனால் நீ இங்கே உட்கார்ந்து இந்தச் சணல் நாரைக் கயிறாக முறுக்கு பார்ப்போம்" என்றாள்.

பெண் கயிற்றைத் திரிக்க ஆரம்பித்தாள். பாபாயாகா அந்த இடத்தை விட்டு மெல்ல வெளியேறி விட்டாள்.

அந்தச் சிறிய பெண் அங்கே உட்கார்ந்து கயிறு பின்னிக் கொண்டிருந்தாள். அப்பொழுது எங்கிருந்தோ ஒரு சுண்டெலி ஓடிவந்து, "பெண்ணே! பெண்ணே! அதோ அடுப்பின்மீது கஞ்சிச் சட்டி யிருக்கிறது. அதிலிருந்து கொஞ்சம் கஞ்சி எடுத்து ஊற்றேன். உனக்கு ஒரு சமாசாரம் சொல்லுகிறேன்!" என்றது.

சின்னப் பெண் கஞ்சி எடுத்து ஊற்றினாள். அதைச் சாப்பிட்டவுடன் எலி, "சின்னப்பெண்ணே! சின்ன பெண்ணே! இந்த மந்திரவாதிக் கிழவி எங்கே போயிருக்கிறாள் தெரியுமா? அவள் குளிக்கிற அறைக்குப் போய் அடுப்பைப் பற்ற வைக்கப் போயிருக்கிறாள். அடுப்பு நன்றாகப் பற்றி எரியத் தொடங்கியவுடன் உன்னைத் தூக்கிக் கொண்டு போய்ப் பொசுக்கி விடுவாள்" என்று கூறியது.

இதைக் கேட்ட மாத்திரத்தில் சிறுமி கிலி பிடித்து நடுங்கினாள்; 'கோ' வென்று கதறி அழத் தொடங்கி விட்டாள்.

ஆனால் சுண்டெலி, "அழாதே! உன் தம்பியை எடுத்துக் கொண்டு ஓடிப்போய் விடு. உனக்குப் பதில் நான் சணலைக் கயிறாகத் திரிக்கிறேன். ஓடு! ஓடு!" என்று கூறியது.

அப்படியே அந்தச் சிறுமியும் தம்பியை இடுப்பில் வைத்துக் கொண்டு வேகமாக ஓடி விட்டாள்.

* * *

பாபாயாகாவோ அடிக்கொரு தடவை ஜன்னலண்டை வந்து "பெண்ணே! கயிறு திரிக்கிறாயா?" என்று கேட்டாள்.

சுண்டெலி அந்தப் பெண்ணின் குரலிலேயே "ஆமாம் பாட்டி!" என்றது.

## "கல்கி" மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

தமிழ் நாட்டில் இப்பொழுது புது விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. 'எழுத வேண்டும்' 'எழுத வேண்டும்' என்ற துடிப்பு இளம் எழுத்தாளர்கள் மத்தியில் பொங்கிக் கொண்டிருக்கிறது. அதற்கு ஒரு நல்ல வாய்ப்பளிக்கவே இந்தப் புதிய பரிசுத் திட்டத்தை ஏற்படுத்தி யிருக்கிறோம்.

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லாரும் கலந்து கொள்ளலாம். தமிழ் நாட்டின் சூழ்நிலையை வைத்துச் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். கதைகள் "கல்கி"யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டுப் பக்கத்துக்குள் வரும்படி இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும். முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாதம் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகள் "கல்கி"யில் பிரசுரமாகும்.

கதைகள் அந்தந்த மாதம் 25ம் தேதிக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர்ந்துவிட வேண்டும். கதைகளின் முடிவு அடுத்த மாத முதல் வாரத்திலேயே அறிவிக்கப்பட்டு விடும்.

கதையின் மீது "கல்கி மாதச் சிறுகதைப் போட்டி" என்று குறித்து அனுப்பி வைக்க வேண்டும்.



குளிக்கிற அறையில் நன்றாக நெருப்புப் பற்றியவுடன் சின்னப் பெண்ணை அழைத்துப் போகக் குடிசைக்குள்ளே வந்தான் கிழவி! குடிசை காலியாக இருந்தது. பெண்ணையும் காணோம்; குழந்தையையும் காணோம். உடனே பாபாயாகா, "நாரையே! நாரையே! பற! பற! பறந்து போய் அவர்களைப் பிடித்துக் கொண்டுவா! சின்னப் பெண் தன் தம்பியைத் தூக்கிக் கொண்டு ஓடி விட்டான்" என்றான்.

உடனே எங்கிருந்தோ நாரை பறந்து வந்தது. சட சட வென்று தன் சிறகுகளை அடித்துக் கொண்டு, குழந்தையைத் தூக்கிச் செல்லும் அந்த ஏழு வயதுச் சிறுமியைத் துரத்திற்று.

சின்னப்பெண் ஓடினான். ஓடி ஓடிப் பாலாற்றை அடைந்தான்.

"பாலாறே! பாலாறே! என்னைக் கொஞ்சம் ஒளித்து வைத்துக் கொள்ளேன்!" என்று கெஞ்சினான் பெண்.

"அப்படியானால் என் பழச் சாறைக் கொஞ்சம் சாப்பிடு!" என்று கூறியது ஆறு.

அந்தப் பெண்ணும் சாப்பிட்டான். "ஆகா! எவ்வளவு நன்றாக இருக்கிறது!" என்று நன்றி பொங்கக் கூறினான்.

இப்போது பாலாறு அவனையும் அவன் தம்பியையும் தன் கரையில் ஒளித்து வைத்துக் கொண்டது.

நாரை அவனைக் கவனிக்காமலே மேலே பறந்து சென்று விட்டது.

அந்தச் சிறிய பெண் மீண்டும் ஓடினான். இப்பொழுது நாரை அவனைக் கவனித்து விட்டது. அது திரும்பி அவனைப் பார்த்து ஓடிவரத் தொடங்கியது. எந்த நிமிஷத்திலும் அவனைப் பிடித்துவிடலாம்.

அவன் என்ன செய்வான் பாவம்! வழியில் நின்ற ஆப்பிள் மரத்தில் அவன் ஏறிக் கொண்டான்.

"ஆப்பிள் மரமே! ஆப்பிள் மரமே! என்னைத் தயவுசெய்து ஒளித்து வைத்துக் கொள்ளேன்" என்று கூறினான்.

"என்னிடமுள்ள காட்டு ஆப்பிள் பழம் ஒன்றைச் சாப்பிடு" என்றது மரம்.

பெண் வேகமாகச் சாப்பிட்டான். "பழம் ரொம்ப நன்றாக இருக்கிறதே!" என்று நன்றியோடு கூறினான். இப்போது மரமும் அவனைத் தன் கிளைகளிடையேயும் இலைகளிடையேயும் ஒளித்து வைத்துக் கொண்டது.

நாரை அவனைக் கவனிக்காமல் மேலே பறந்து சென்று விட்டது. பிறகு அவன் ஆப்பிள் மரத்தை விட்டு இறங்கினாள்.

அந்தச் சிறிய பெண், தன் தம்பியை எடுத்துக் கொண்டு வேகமாக ஓடத் தொடங்கினான். அவன் தன் வீட்டை நெருங்கி விட்டான்.

நாரை அவனைத் துரத்திக் கொண்டு சட சட வென்று இறகுகளைக் கொட்டிக் கொண்டு அருகில் வந்து விட்டது.

இன்னும் ஒரு நிமிஷம் இருந்திருந்தால் நாரை அவனிடமிருந்து தம்பியைத் தட்டிப் பறித்துக் கொண்டு ஓடியிருக்கும்.

அதற்குள் பெண் ரொட்டிச் சூளையடுப்பு அருகிலே வந்து விட்டான்.

"அடுப்பே! சூளையே! என்னை மறைத்துக் கொள்ளேன்" என்றான்.

அடுப்பு, "என் ரொட்டியைச் சாப்பிடு!" என்றது.

சிறு பெண் ஒரு ரொட்டியை எடுத்து வாயில் அடைத்துக் கொண்டு அடுப்புக்குள் மெல்ல நுழைந்து ஒளிந்து கொண்டு விட்டான்.

நாரை சூளையைச் சுற்றிச் சுற்றி வந்தது. சிறுமியையும் குழந்தையும் காணவில்லை. எனவே அது பாபாயாகாவிடம் திரும்பி விட்டது.

சிறு பெண்ணும் சூளைக்கு நன்றி தெரிவித்து விட்டுத் தம்பியுடன் வீட்டுக்குத் திரும்பினான்.

அவன் வீட்டுக்கு வந்து வெகு நேரம் ஆனபின்னரே அவன் பெற்றோர்கள் திரும்பி வந்து சேர்ந்தார்கள்.

'ஹா! லைப்பாய் சோப்
உபயோகித்துக்குளிக்க
வேண்டிய நேரம் இதுதான்.'

– அது சரீரத்தை
சுத்தமாக்குவதுடன்
புத்துணர்ச்சியைத்
தருகிறது!




இந்தியாவில் தயாரித்தது

L. 259-50 TM

